உ

கடவுள் துணை.

# சித்திரபுத்திர நயினார் கதை

இஃது - மயிலம்

சுப்பிரமணியசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு.

சென்னை-இட்டா

பார்த்தசாரதிநாயுடு

அவர்களாற்றமது,

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1909.

சென்னை-ஆச்சாரப்பன் தெரு 84-வது நெ. வீடு.

உ

கடவுள் துணை.

# சித்திரபுத்திர நயினார் கதை.

காப்பு.

அத்தனும்அயனுமா லுமானகல்விவிகள்தேவர்
நித்தமும்பலாபலன்கள்செறியுடன்தெளிவதற்குச்
சித்திரபுத்திரனார்செனித்ததார்கதையைப்பாட
மத்தகமுகனுந்தொந்திவயிறனக்காப்பதாமே.

வெண்பா.

சீர்கொண்டபூதலத்திற்சித்திரபுத்திரன்கதையைப்
பார்கொண்டசெந்தமிழ்ப்பாடவே-யேர்கொண்ட
வார்பூத்தகலைமுலைமாதுமையாளீன்றெடுத்த
கார்பூத்தகுஞ்சரமே காப்பு.

விருத்தம்.

ஆனைமுகமுமொருகொம்பும்அகன்றமார்புஞ்சிறுகண்ணும்
பானைபோலப்பெருவயிறும்பாங்கார்பூணூலழகும்
தானேதோன்றியெனதுளத்திற்றயவாய்வாழும்விநாயகனே
நானேயுனதுபதந்தொழுதேனுவிதிப்பாய்கணபதியே

நூல்.

திருமகிழ்ந்துவாழுமந்தச் சித்திரபுத்திரர்கதையை
விருப்பமுடன்பாட விநாயகனேமுன்னடவாய்
விக்கினவிநாயகனே வேழமுகத்தைங்கரனே
சொக்திக்கணபதியே தூயவனேமுன்னுதவாய்
கர்த்தனருள்பெற்ற கணபதியேசேர்த்தருள்வாய்
சத்திக்கணபதியே தையலுமைபுத்திரனே
எத்திசையும்போற்றும் இறையோன்திருமகனே
பத்தியுடன்தொழுவோர்க்குப் பாவங்கள்தீர்த்தவனே
சித்திரபுத்திரர்கதையைச் செப்பவருள்செய்வாயே
சீராகவாழுஞ் சித்திரபுத்திரர்கதைக்கு
சேராகவந்துதவு நீலமயில்வாகனனே
அந்தரியேதாயே அயனாரிடத்திருக்கும்.
சுந்தரியேவெள்ளைநிறச் சோதியாய்முன்னுதவாய்
பத்தியுடனெப்பொழுதும் பாங்காகவந்துதவாய்
புத்திமிகவுண்டாகப் பொற்றொடியேவந்துதவாய்
பத்தியுடன்யானும் பாடுகிறேனிக்கதையை
ஆதியரனும் அச்சுதனும்வேதாவும்
நிதில்லாமுப்பத்து முக்கோடிதேவர்களும்
எல்லோருமாக யிருக்குமோர்காலையிலே
சித்தமகிழ்ந்து செப்புவார்ஈசுரரும்

நன்றுதீதுதெரிய நடுவெழுதுவோர்கணக்கர்
ஈசனருள்பெற்ற எமகுமாரர்தன்னிடத்தில்
நேசமுடன்கணக்கு நிச்சயமாய்த்தானெழுத
புண்ணியஞ்செய்தவரைப் பூதலத்தில்வாழ்பவரை
எண்ணரியபாவ மியற்றியோர்தங்களையும்
ஒன்றுக்கவராம லுள்ளபடிதானெழுத
வென்றிபுனைநற்கணக்காய் விரைந்தேயெழுதிவர
அத்தரிடநாட்டுக்கு அதிகாரியாங்கணக்கர்
முத்திபுரநாட்டுக் கெங்குமுதற்கணக்கர்
நாட்டுக்கணக்கும் நமனார்பெருங்கணக்கும்
எட்டுப்புரத்தில் எழுதுமெழிற்கணக்கர்
நல்லார்குணத்தை நடுவெழுதுநாயகர்
பொல்லார்குணத்தைப் பிரித்தெழுதும்புண்ணியனார்
தன்னைநினைத்தவர்க்குத் தன்னியமஞ்செய்தவர்க்கும்
இந்நிலத்திற்செல்வம் இசைவாகத்தானருள்வார்
நல்லதிருக்கதையை நானிலத்திற்பாடுகிறேன்
எல்லோருந்தேங்க ளியல்பாகத்தான்கேளும்
உத்தமனார் தன்கதையை உறுதியுடன்தான்கேளும்
அத்தன் திருக்கதையை யன்பாகத்தான்கேளும்
மன்னவனார்தன்கதையை மகிழ்ந்திருந்துகேட்டவர்கள்
தென்னவனார்தன்கதையைத் தினமும்வந்துகொண்டாடி
பரமனார்தன்கதையைப் பக்தியுடன்கேட்டவர்கள்
பார்வேந்தன் தன்கதையைப் பண்புடனேகேட்டவர்கள்
சித்திரபுத்திரக்கதையைச் சிந்தையுடன்கேட்டவர்கள்
உத்திரங்கள்சொல்லாம லுண்மையாய்க்கேட்டவர்கள்
புத்திரனற்பாக்கியங்கள் பொருந்தியேதான்வாழ
வேணுமென்றயீசுரனார் விஸ்தாரஞ்செய்தகதை
இனிமேல்நடத்துகிறோம் இப்போதுசெய்யும்வகை
சித்திரைக்குச்சித்திரையிற் சீரார்பவுர்ணமியில்
விரதமதுதானிருந்து வெண்பட்டுத்தானுடுத்தி
புண்ணியமான பூதானந்தான்கொடுத்து
அடைக்காயும்வெள்ளிலையும் அன்பாகத்தான்கொடுத்து
பூதானம்கோதானம் வஸ்திரதானங்கொடுத்து
பந்தல்விதானம் பாங்காகத்தான்போட்டு
தோரணங்கள்கட்டித் துலங்குமேற்கட்டிகட்டி
வித்தைநாயகரை விரைந்துமேதான்போற்றி
செய்யும்வகையதற்கு சிறக்கவேவைத்தபின்பு
பூரணகும்பம் பொன்னின்குடத்தில்வைத்து
வஸ்திராபரணங்கள் வகையுடனேதான்சாத்தி
தெட்சணைகள்வைத்து திருமாலைகள்சாத்தி
சந்தனக்குங்குமஞ் சங்கையுடனேசாத்தி
வாழைக்கமுகுடனே வான்கரும்புதானிருத்தி

பொன்னின் விளக்குவைத்துப் பூமலர்கள் தான்சாத்தி
வாழையிலைபரப்பி வைக்கும்வகை கனிகள்
வாழைப்பழமும் வருக்கைப்பலாச்சுளையும்
மாங்கனியுந் தேங்கனியு மற்றுமுள்ளநற்கனியும்
ரோமாங்கனியுடனே செழுங்கதலிநற்பழமும்
விளாங்கனியுஞ்சர்க்கரையும் விரவிமிகப்படைத்து
கடலைசிறுபயறுங் காராமணிப்பயறும்
கடலைபொரிமாவும் வேண்டும்பணியாரம்
தேனுந்தினையும் திரமாகத்தான்படைத்து
கரும்பொடிளநீருங் கற்கண்டுநற்கனியும்
பொருவிலங்காயுடனே பிட்டமுதனள்ளுருண்டை
கொழுக்கட்டைதேங்காய் கொண்டுவந்துதான்படைத்து
தோசைவடைபிட்டிவியுந் தோன்றமிகப்படைத்து
அப்பமதிரசமும் பதிவாகத்தானும்வைத்து
பாயசமும்பானகமும் பதிவாகத்தானும்வைத்து
அன்னமிகசமைத்து அரன்பாலன்முன்னேவைத்து
புத்துருக்குநெய்யும் பொறிக்கறியுமுள்ளதெல்லாம்
அடைக்காயும்வெள்ளிலையும் அன்பாகத்தான்படைத்து
அத்தனார்தமருளால் அறுமுகசெய்பபண்ணுவித்து
நெய்வேதனஞ்செய்து நியமமுடன்பூசித்து
தோத்திரங்கள்செய்து தொழுதுமிகப்பணிந்து

விருத்தம்.

கங்கையைத்தரித்தோன்பாலா கரிமுகாவுன்றன்பாதஞ்
சங்கையாய்த்தரணியோர்கள் தயவுடன்போற்றிபோற்றிசெய்ய
மங்களமாகவாழ்ந்து வந்தெனக்கருளுநாதா
யெங்குமாய்நிறைந்தாய்நீயு மிறையவாபோற்றிபோற்றி

வசனம்.

இப்படிக் கணபதியைத் தோத்திரஞ்செய்து அருச்சனை நெய் வேதன முதலானதுஞ் செய்து தூபதீபங் கொடுத்து அப்பால் மேற் கதையை நடத்தவேண்டியது.

கதை.

சங்கரனார்பெய்க்கருத் தானெழுதுமெய்க்கணக்கர்
சித்திரபுத்திரரைச் சீருடனேதானிருத்தி
பீதாம்பரஞ்சாற்றிப் பெருப்பவட்டஞ்சாத்தி
சீதனக்களான செண்பகமுந்தான்சாத்தி
சுகதாதியுள்ளதெல்லாந் தோன்றமிகச்சாத்தி
அறிவால்முறைப்படியே அர்ச்சனைகள்செய்தபின்பு
வெள்ளிலையோடும் விளக்கும்அடைக்காயும்
உள்ளமகிழ்நெய்வேத்தியம் உவந்துமிகப்படைத்து
புத்தகத்திலேநேடிலக்கும் பொன்னினெழுத்தாணியுடன்

பூதலத்திலுள்ள புதுப்பண்டமுள்ளதெல்லாம்
இஷ்டமுடனேபடைத்து எல்லோருமிக்கதையைத்
தெண்டனிட்டேயிக்கதையைச் செப்பவேணுமென்று
பத்தியுடன்கேட்கப் பகர்கலுற்றவிக்கதையை
ஓங்குபுகழ்மாதர்மைந்தர் உண்மையுடன்கேழ்க்கச்
சொல்லுமையாவென்று துணையமறக்கேழ்க்கலுற்றார்
கல்லுமுருகிக் கருத்துடனேகேழ்க்கலுற்றார்
மன்னனும்புகழுங்கள் மங்கிலியந்தான்வாழ்க
மலடிகளெல்லா மனமுருகித்தான்கேட்க
அகம்பாவம்விட்டு அன்புடனேகேட்டவர்கள்
புண்ணியங்கள்செய்து புதுமையுடன்கேட்டவர்கள்
நல்லநினைவுவைத்து நன்றாகக்கேட்டவர்கள்
கதைமுழுதுங்கேட்டவர்கள் கயிலைப்பதம்பெறுவார்
வந்தவகைக்குறைவு நீங்குமென்றீசனார்.
பிச்சையிடாத பெரும்பாவியானவரும்
நச்சுவாய்ப்பல்லியர்கள் நடுக்கேடுசெய்தவர்கள்
கள்ளிகளாயுள்ளார் கணவனுரைதப்பினவர்கள்
பிச்சையிட்டுண்ணாத பெரும்பாவியானவர்கள்
குண்டுணிகள்சொல்லுங் கொடும்பாவியானவர்கள்
உற்றுநின்றுகேட்டு உறவைமுறித்தவர்கள்
பலநினைவுவைத்த பாவிகளானவர்கள்
கொற்றவரைத்தள்ளிவைத்த கொடும்பாவியானவர்கள்
மற்றவரைத்தேடி வாழ்ந்திருக்கும்மகாபாவி
பிள்ளையழிக்கும் பெரும்பாவியானவர்கள்
சண்டையிட்டுநித்தந் தன்பேச்சுமேலிடவே
கொண்டவனைப்பேணாத கொடும்பாவியானவர்கள்
தன்வீட்டைச்சாத்தி யயல்வீட்டிற்போயிருந்து
பின்னங்கள்பேசும் பெரும்பாவியானவர்கள்
பசித்தாரிருக்கப் பார்த்திருந்தபாவியர்கள்
இத்தியாதிபேர்களெல்லாம் இக்கதையைக்கேளாமல்
கடக்கவேயில்லுமென்று கணக்காயுரைத்தமொழி
பூமிதனில்விளைந்த புதுமண்டபம்வந்ததென்றாள்
பெரியவர்முதலானவர்க்குப் பிசகாமல்தானீந்து
பேதியர்க்கீய்ந்தீய்ந்து விரதமதைக்கொண்டாடி
கேட்டவர்களெல்லாங் கிளைச்சுத்தம்வாழ்ந்திருப்பார்
காரணமாயநடந்த கதையைநடத்துகிறோம்
பதிவிரதையாயிருந்து பாங்குடனேகேளுமென்றார்
பக்தியுடனேகேட்டாற் பாடுகிறேனிக்கதையை
உத்தமனார்கதையை யுரைக்கிறேனினிகேளுமய
ஈசனருளால் எமதருமர்தன்னருகே
நேசமுடன்கணக்கு நிச்சயமாய்த்தானெழுத
புண்ணியஞ்செய்தவரை பூதலத்தில்வாழ்பவரை

பாவங்கள்செய்வாரைப் பதுக்குகணக்கெழுத
வேணுமென்றுசொல்லி விமலனார்செய்தகதை
கயிலாசமீதிற் காரணமானகதை
இப்படியேதானுமங்கே நடந்தன்றுயாதில்
தெய்வலோகப்பட்டணத்திற் றிறமாய்நடந்தகதை
நன்றாகச்சொல்லுகிறேன் நாடெல்லாந்தானறிய
இந்திரனிந்திராணியுட னிருந்துமிகவாழ்கையிலே
புத்திரவாசை பிடித்துமிகப்புலம்பி
நடந்தகதைசொல்லுகிறோம் நன்றாகக்கேளுமென்றார்
நல்லார்பசவு மிறையோன்கொடுத்திருக்க.
பிள்ளையில்லாவாழ்வு பெருமையடையாதென்று
இந்திராணியம்மை மயங்கிமிகவாடி
சொன்னவசனத்தைச் சொல்லுகிறேன்கேளுமென்றார்
பட்டிபலுகாது பாவங்கள்தீராது
ஆளடிமைநன்று ஆகாசம்போய்விடுங்காண்
அபாணுநிபெல்லாம் அழிந்திடுங்காண்மன்னவரே
சித்திக்ககாரியங்கள் சிதறியேபோய்விடுங்காண்
தருமங்கள்செய்யவென்று தானினைத்தாரிந்திரரும்
கன்னிகாதானங் கருத்தாகச்செய்தார்காண்
மாதானங்கோதானம் வஸ்திரதானங்களும்
விமரிசையாய்த்தருமங்கள் வேணபடிசெய்தபின்பு
தவசுசெய்யவேணுமென்று தானினைந்தாருத்தமனார்
உத்தமருமுத்தமியும் உலகாண்டோன்றனைநினைந்து
தபசுகள்செய்தகதை சாற்றுகிறோமினிகேளும்
இந்தக்கதையை யெள்ளளவுந்தப்பாமல்
கேட்டவர்களெல்லாங் கிளைசுற்றம்வாழ்ந்திருப்பார்

விருத்தம்.

சித்திரபுத்திரர்கதையைச் சிறப்புடன்கேட்டோர்நோன்பு
பத்தியாயிருந்தோரெல்லாம் பழவினைநீங்கிநல்ல
அத்தர்தன்பதியைச்சேர்ந்துஅத்துடன்சேர்ந்துவாழ்வார்
பத்தியாய்முன்னூல்சொல்லும் பகர்ந்தனர்நூல்வல்லோரே.

வ-ம். அதெப்படியென்று கேட்பீரானால் அனேகமான திரவியங்கள் பூமிகள் முதலான சகலபாக்கியங்க ளிருந்தாலும் மைந்தனில்லாதவாழ்வு வாழ்வல்லவென்று இந்திரனும் இந்திராணியும் வெகுமனஸ்தாபமாய்க்கிலேசப்பட்டுத் தங்கள் பொக்கிஷக் களஞ்சியத்திலுண்டான திரவியமுதலானதை யெல்லாங்கொண்டு அநேக தருமங்களைச்செய்து பின்பு பார்வதிசமேதராகிய ஈஸ்வரரை நினைத்து தவசுசெய்யச் சித்தி புத்திரநயினார் வந்துபிறந்து அவதாரச்சித்தாக நடந்தகதையானதால் இந்தக்கதையை மனம்வைத்து அன்பாகப்பத்தியுடனே கேட்டவர்களுக்கு வரும்பலத்தை இனிமேல் விபரமாகச் சொல்லுகிறோம் கேட்பீர்களாக.

நடை.

உத்தமருமாவார் உயர்ந்தகுடியாவார்
பத்தினிகளாவார் பலபிள்ளைதாயாவார்
சத்திசிவம்பொருந்தித் தாட்டிகராய்வாழ்ந்திருப்பார்
நீடூழிகாலம் நேசமதாய்வாழ்ந்திருப்பார்
மங்கிலியம்வாழ்ந்து மகிழ்ச்சிமிகவுண்டாகும்
செல்வமிகவுண்டாகிச் சீராகத்தானிருப்பார்
ஆழ்கடல்வற்றிடினும் அவர்புகழ்தான்குன்றாது
மாற்றில்லாச்செம்பொன் மதிக்குமவர்வசத்தில்
புண்ணியவானானாலும் போதமுள்ளாரானாலும்
மண்ணுமதியுள்ளளவும் வாழ்வுமிகவுண்டாகும்
சித்திரைக்குச்சித்திரையிற் சீரார்பவுரணையில்
சித்திரைமாதந் திருநோன்புவந்ததிலே
உத்தமரைநோக்கி யொருநோன்புசெய்தவர்கள்
மைந்தர்களானாலும் மடந்தையர்களானாலும்
எந்தக்குலத்தில் எவர்களேயானாலும்
தந்தைதனைக்கொன்ற பெரும்பாவியானாலும்
நித்தமிதுவுண்ணும் நீச்சரேயானாலும்
யிந்தக்கதையை யியல்பாய்க்கருத்தில்வைத்து
லோகத்தியற்கையென்று யோசியாமலேயிருந்து
இளகும்படிமனதி லெந்நேரமும்நினைத்தால்
அங்கேதானென்புக் கவரேவெளிப்படுவார்
இந்திரனைப்போலே இனிதாகவாழ்வுமுண்டாம்
அந்தநெடுமால்பதத்தில் அழகுடனேவாழ்ந்திருப்பார்
சிவனருளுமுண்டாகும் தீங்கொருநாள்வாராது
நம்முடையசெல்வங்கள் நாள்தோறுமுண்டாகும்
முன்னேன்பிரந்த முக்கடனேயானாலும்
இன்னேன்பிறந்தவர்க ளிகபரமுந்தான்பெருவார்
முத்தியருள்கொடுக்கும் மோசங்கள்நீங்கும்
வல்வினைகளானதெல்லாம் வழிவிலக்கித்தான்போகும்
நல்லதொருபுண்ணியங்கள் நாள்தோறுமுண்டாகும்
ஆராகிலுமிதனை யன்புடனேகேளுங்கள்
நயினார்பிறப்பையினி நன்றாகச்சொல்லுகிறேன்
கயிலாசத்தில்நடந்த காரணத்தைச்சொல்லுகிறேன்
சிவனார்கயிலையினிற் சிறப்பாயிருக்கையிலே
அரனார்மனமகிழ்ந்து ஆனபராசத்தியுடன்
கேளாயுமையவளே கிருபையுடன்சொல்லுகிறேன்
ஊழின்விதிப்படியே யுள்ளபடியேயுலகில்
அவரவர்செய்தபுண்ய பாவங்கள் தானறியார்
நாமேயறியவென்றால் ஞாயமில்லைகண்டாயே
நம்மையறியாமல் நாள்தோறும்வைத்தவர்கள்

சிவசிந்தையில்லாத சென்மங்களானவர்கள்
முன்வினையைவிட்டு மோசம்பெறுவதற்கு
வேணவரங்கொடுத்து மேதினியிற்றுனவர்கள்
அசுரர்அரக்கர் அநேகமுதலானோர்
சத்திசிவமறந்து தானிடுக்கஞ்செய்வதனால்
அப்படியேவாராமல் அதற்கானசெய்தியான்று
ஒப்பில்லாப்பெண்மணி யுமையவளேநீகேட்பாய்
செப்பமுடன்கணக்குச் சித்திரகுப்தனெழுதி
இட்டமுடன்செய்து சிட்சைகள்தாஞ்செய்வதற்கு
நாமேநமைக்கெழுத நல்லநல்லகண்டாயே
மூத்தப்பிள்ளைகணபதியை மொழிவதுநல்லதல்ல
மூலமாயிவ்விடத்தில் மூத்தமகன்தன்னைவைத்தோம்
கோலமயில்வாகனனுங் கொடுஞ்சூரர் கண்டாயே
சூரரைக்கொல்லவே சோதனைக்குவைத்தோங்காண்
சாலக்கணக்கெழுதான் தகப்பன்குருசாமி
கோலப்பிரமாவைக் கொண்டுசிறையும்வைத்தான்
அவ்வினைதுதித்தவர்க்கு அனேகவரங்கொடுப்பான்
புவனக்கணக்கெழுதப் புகழ்சொல்மாலுன்மகனும்
பாலனிருந்துயபழிப்பாக்கிடமாமேனும்
மக்களிருந்து மனுநீதிதானெழுத
இந்தலைகைக்கணக்கு மெழுதிவரும்படிக்கு
நல்வினைகள்தீவினைகள் நன்றுமெழுதிவர
எந்தவினையானாலு மியல்பாகவுள்ளபடி
கணக்குப்படியே கருமங்கள்தான்பொசிக்க
பிறர்சாட்சியால்கணக்குப் பிரபஞ்சந்தானிருக்கும்
என்றாரனுர்சொல்ல வியல்பானபார்வதியும்
நல்லதுதான்சொல்லவந்தீர் நாயகமேயுமமுடைய
திருவுளத்துக்கேற்றபடி செய்யுமென்றாள்பார்வதியும்
இருந்துமிகப்பேசி யீசருமேதுசொல்வார்
பூமாதைநோக்கிப் பொற்பலகைகொண்டுவர
என்றபொழுதே யியல்பானபொற்பலகை
நன்றெனவேபார்வதியு நாதன்முன்புவைத்தனளே
பார்வதிகொண்டுவரப் பரமனுமேதுசொல்வார்
சித்தமகிழ்ந்து சித்திரக்கோல்தந்திடென
அந்தப்படியே யம்மையுமைகொண்டுவர
சாதிலிங்கக்காரன் தவளநிறபச்சையுடன்
நீலமணிவெள்ளையுட னெறியாகச்சேர்த்துடனே
பால்நிறமுமாகப் பாவித்தார்பலகையின்மேல்
சாலவேதம்மைப்போலாகவென்றுபார்வதியும்
கோலமுடனிருக்கக் குறித்தார்சித்திரத்தில்
பஞ்சவர்னமாகப் பாகமதுதப்பாமல
திருக்கரத்தாற்றுனுஞ் சிறப்பாயெழுதினரே

தம்மைப்போலிருக்கவென்று தானேயெழுதலுற்றார்
உருவையெழுதி யுண்மையுடன் தான்பார்த்து
திரிபுரையேயரியுஞ் சித்திரத்தைப்பாவெனவே
இந்தப்புதல்வனை நீ யிப்போதழையுமென்றார்
அழையுமென்றபோதே யாவுமதைப்பார்க்க
ஆரும்றியாத அரனார்தம்பொருளால்
சித்திரத்திலேயுதித்த புத்திரனைவர
வாராய்மகனென்று மலர்க்கரங்கள்நீட்டிடவும்
கைகட்டிமுகங்காட்டி கருவுருவாய்த்தான்திரண்டு
கருணைவிழிநோக்க மாதாவையிற்பிறந்தனரே
பிறந்தாரேவுத்தமனார் வேறும்வரம்பெறுகப்
பணிந்தவர்க்கேயருள்கொடுக்கும் பரமனாதசந்நிதியில்
தெண்டனிட்டுவாய்புதைத்து சென்னியின்மேற்கைகுவித்து
நிற்குமந்தவுத்தமனை நீலகண்டர்தான்பார்த்து
எக்கோடிகாலம் இயல்பாகவுள்ளமட்டும்
அரக்கர்குலம்நீடூழி யாகவேதானிருப்பீர்
பல்லாயிரங்கோடி பகிரண்டமுள்ளமட்டும்
எள்ளுக்குளெண்ணெபோ லெங்குந்நிறைந்திருப்போம்
பூவுக்குள்வாசம்போற் பொருந்தியிருப்போம்நாம்
பரைக்குமமக்குமிது பண்புதான்கண்டீரே
ஒன்றுமிருக்குமிட மொருவருந்நாமறியார்
அறிவார்தவமுடையா ரடையாளஞ்சொல்லுகிறோம்
நன்றுயுரைக்கிறோம் நன்மகனேகேளப்பா
மோட்சவழிசத்தியுடன் மொழிந்தோமதுபோல
மோட்சவழியுபதேச மொழிந்தோமேயன்றுனக்கு
எங்களுடமனதி லிருக்குமின்னவுகளும்
தேவரசுரர்கள் ரிஷிமுனிகள்மாதவர்கள்
எறும்புகடையானதல யெண்பத்துநாநூறு
ஆயிரம்யோனிபேத மாகுமுயிர்களெல்லாம்
செய்கின்றதெல்லாந் திறமாயெழுதுமென்றார்
கருவேலைநற்கணக்குங் கட்டாயெழுதுமென்றார்
கயிலாசத்துள்ள கணக்கெல்லாமெழுதுமென்றார்
மகாமேருநற்கணக்கும் வைகுண்டநற்கணக்கும்
பிரமலோகக்கணக்கும் பின்புமற்றுமுள்ளதெல்லாம்
எல்லாக்கணக்கு மெழுதவருள்கொடுத்து
உமையவளுந்தானு முண்மையாய்த்தானழைத்து
ஆபரணப்பெட்டகத்தை யழைப்பித்தாரந்நேரம்
பூட்டுத்திறந்துப் புதுப்பட்டுத்தான்கொடுத்துக்
காலிற்சிலம்பணிந்து கனகமணித்தண்டையிட்டு
முன்கைமுதாரி முன்கைவளைத்தான்சாத்தித்
தங்கச்சரப்பளியுந் தரித்துவயிரியமும்

எப்படியென்றால், கயிலாசத்திலே சுவாமியும் பரமேஸ்வரியும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் மற்றுமுள்ள தபோதனர்களும் நிறைந்திருக்கும்போது அண்டபுவனங்களெல்லாம் பாவபுண்ணியபலன் தெரியவேண்டி நம்முடையகுமாரர்களிருபேரும் காரணமான கதைகள் சிலது நடக்கவேண்டியதற்கு அவர்களை வரவேண்டிபதால் மற்றுமுள்ளபேர்கள் இதற்கு ஆகத்தக்கனவர்களாருமில்லையென்று சுவாமி பரமேஸ்வரர்தானேயோசித்து உமையையழைத்து தங்கப்பலகையையெடுத்துவரச்சொல்லி உருவமைக்க அதையுமையாள்கண்டு அதிசயப்பட்டு கருவுருவாய்ப்பேசும்படி கிருபைபாலிக்கவேணு மென்றறிவிக்க அப்படியே கிருபைசெய்து விஞ்சையமந்திரமுபதேசித்துசித்திரபுத்திரரென்றுபேர்வைத்து ஆடையாபரணமுதலானதும்பூட்டி மகனைக்கட்டிமுகந்து அண்டபுவனங்களிலுண்டான முன்னூள்கணக்கும் கருவேலமும்விஷ்ணுமூர்த்தி பிர்மாமுதலானவர்களிடமுள்ள கருவேலமும்பொக்கிஷமுதலானதும் பாவபுண்ணிய பலகணக்குங்கொடுக்க உமையாகிய பரமேசுவரியும் வேண்டத்தக்கின வரங்களுங் கொடுத்துத் தினச்செய்தி நடக்கிறபாவபுண்ணியமுதலானபலகணக்குநமக்கறியவுமென்றுசுவாமியுத்தரவுகொடுத்தபடியே சித்திரபுத்திரருங்கயிலையங்கிரிவாசரானபரமேசுரர் சந்நிதானத்திலிருந்து கணக்கெழுதிவந்தார் இப்படிக்கயிலாசத்தில் நடந்துவரும்போது தேவேந்திரன் மகாஆசைகொண்டு வேணத்தக்கின தருமங்கள்செய்து ஈஸ்பரனை நோக்கி இந்திராணியுடன் தவசுபண்ணுகிற விஸ்தாரத்தை இனிமேற் சொல்லுகிறோம் அன்புவைத்து ஒரேமனதாகக் கேட்பீர்களாக.

நடை.

எண்ணத்தொலையாத வேற்றுமிலபூசைதன்னை
செய்யவேணுமென்று திரமாகவேயினைந்து
தேவாதிதேவரெல்லாஞ் சேரவேசூழ்ந்துவர
செம்பொன்மணித்தேரிற் சிறப்புடனே தானேறி
பசும்பொன்னுலகான பதியைவிட்டுத்தேர்நடத்தி
விண்ணுலகக்கன்னியர்கள் வேணப்பணிசூழ்ந்துவர
இப்படியேயிந்திரனு சேத்தரவன்செய்ய
வருகிறவழிதனிலே வந்நாள் அகலிகைதான்
புண்ணியதீர்த்தமாடப் புறப்பட்டாள் அகலிகையும்
தந்திரமாயப்போது தான்கண்டாரிந்திரனுர்
மெத்தவேமையலாகி மெய்சோர்ந்தறிவழிந்து
தேர்மேலேதான்விழுந்தார் தேவர்கள்சென்றெடுத்தார்
பார்மேல்நடந்து பகற்கண்டஆசையினால்
காதல்கொண்டஇந்திரனர் காமவினையினைந்து
ஆதரவுபேசி யகலிகையைச்சேரவெண்ணி
தேரைமிகநிறுத்தித் தேவர்களை யனிறுத்தி
மாயமாய்ச்சென்று மருத்துமாமலையிலுள்ள

காய்கனிகள்கொண்டுடனே காரிருளாமந்நேரம்
மயப்பரவசத்தால் மகிமைதனையிழந்து
ஆசைத்துயரமதால் அகலிகைவீட்டிலிலே
சென்றாரேயிந்திரனார் தெய்வவுருமாறி
அன்றிரவுநல்லுறக்க மதிர்நடுச்சாமமதில்
வேளைவிடிவெனவே விடியற்காலங்கூவும்
கோழியாய்நின்று கூவினானிந்திரனும்
அப்போதுகௌதம ரானரிஷிதானும்
எப்போதும்போலே விடிந்ததேயென்றெழுந்து
தெண்டுகமண்டலமுந் திருநீற்றுங்கோலுடனே
கங்கைக்கரையிலவந்து நின்றார்மகாரிஷியும்
கங்கையுறக்கமதைக் கண்டார்மகாரிஷியும்
மாயரிந்திரனே மாயமோ தெரியாது
நந்தவனஞ்சென்று நாமறிவோமென்றுவர
அந்நாலரும் அருப்பாயிருந்ததுபார்
இதென்னசோதனையோ ஈஸ்வரரேவஞ்சமென்று
அதிசாமமேநேரே யறியாமல்வந்ததென்று
மனக்கவலையாகிரிஷி மனையிடந்தமீண்டுவந்தார்
சென்றறிவோமென்று திரும்பிவருமந்நேரம்
இந்திரனுமவ்விருளில் ரிஷிரூபந்தானெடுத்து
வந்துஅகலிகையின் வாய்த்தமுகம்நோக்கி
மனக்கவலைமையலொடு வந்தவரலாறெல்லாம்
மிகவுமென்றுசொல்லிக் கெணிதமாய்ச்சொன்னவுடன்
பாவிகெடுவாய் பத்தினிமார்தன்னிடத்தில்
நீவினையால்வந்தாயே சீசியுன்மகிமையுடன்
நீதியழிந்திடுவாய் நிச்சயமதப்பாதென
முனைச்சியில்லாத அகலிகைசொல்லிநிற்க
வாசவனுமந்நேர மயக்கததால்வீழ்ந்திறைஞ்சி
ஆசைத்துயர்தீர்ப்பாய் அகலிகையேயெனத்தொழுது
அப்போதமகாரிஷியு மதிவேகமாய்வந்தார்
மெய்ப்பாகபோனவரு மீண்டுவந்தாரந்நேரம்
கண்டுயிதுவென்ன காரணமோவென்றுசொல்லி
அண்டர்பதிக்கோனே ஆரடாவென்றுசொல்லி
பூனையுருவங்கொண்டு போனானேயிந்திரனும்
ஆரடாவிந்நேர மறிவுகெட்டுவந்ததென்ன
பெரும்பிறப்பும் பிழையாமற்சொல்லெனவே
இந்திரனேநானகாண ரிஷியேநானும்மிடத்தில்
வந்ததுவேறில்லை வருஷப்பலனுள்ளதெல்லாம்
சாத்திரங்கேட்க தான்வந்தேனென்றுரைத்தார்
இந்நேரநீயு மிடும்புசெய்யவந்தவன்காண்
அகலிகையைவிச்சித்தே படைத்தாய்நீயென்றுசொல்லி
ரிஷிக்குத்தான்கண்சிவந்து நெருப்புப்பொறிபறக்க

இன்றெரித்தோமாலி யிந்திரலோகமறியும்
இச்சாபமிந்திரனை இன்றுமெரியாமல்
துற்சாபம்பேறு சொல்லுவார் அப்பொழுது
தன்தாரம்விட்டு பிறர்தாரம்வேண்டினதால்
இந்திரன்சரீரமெல்லாம் யோனியாய்ப்போகவெண்ணி
ஆயிரம்யோனி அங்கமெல்லாந்தான்வெடிக்க
என்றுமகாரிஷியு மேற்றதொருசாபமிடத்
தப்பாமலந்நேரம் வெடித்துதேதான்குறியும்
கண்டானேயிந்திரனுங் கண்கலக்கமுண்டாகித்
தொழுதானேரிஷியடியைத் தோற்றமுடனந்நேரம்
பெரியோரே பொறுப்பீர் பிழைசெய்தேனுன்சிறியேன்
அரியவினைக்காளானேன் ஆசையாற்றான்விரும்பி
வஞ்சகனுமானேன் மாபாவிதானுனேன்
வஞ்சகமாய்ச்செய்தகுற்ற மகாரிஷியேநீர்பொறுப்பீர்
என்றுசொல்லிஇந்திரனும் ரிஷியை அடிபணிந்து
இந்திரலோக மிழந்துநான்போகாமல்
இச்சாபந்தீர்ந்து இரட்சிக்கவேணுமென்று
அச்சாபத்தோடே யருகேதானிற்பளவில்
இந்திரனைப்பார்த்து ரிஷியுமேயேதுரைப்பார்
இருடிகள்சாப மிந்திரனேநீகாது
ஆணவமாயையினுல் அறியவந்தவிந்திரனே
தானுமாலயனுரைத் தரணியிலேபூசைசெய்தால்
ஆயிரம்யோனியு மாயிரங்கண்ணுகுமென்று
ஆயிரங்கண்ணுகுமென்ற அம்முனியைத்தெண்டனிட்டு
பூசைசெய்தேயிந்திரனும் போனுன்காண்அந்நேரம்
அப்போதுமகாரிஷியும் அகலிகையைப்பார்த்துடனே
கருங்கல்லாய்ப்போகவென்று கடுஞ்சாபமிட்டனரே
அப்போதேயகலிகை அடிதொழுதுதெண்டனிட்டு
வேர்த்துவிருவிருத்து மெய்கலங்கியுள்நடுங்கி
இச்சாபந்தானும் எனக்கோவரவேணும்
இதென்னமாயமோ எம்பெருமாள்சோதனையோ
சாபநிவர்த்தி தானருளவேணுமென்று
அகலிகைத்தான்பணிந்து அடிதொழுதுதெண்டனிட்டு
கேட்குமளவில் கிருபையுடன்மகாரிஷியும்
அரக்கர்குலமறுக்க அம்பாகமாயவனுர்
ரவிகுலத்தில்வந்துதசரதன்பாலனுய்ப்பிறப்பார்
நாலுபேராகவந்து பிறந்துவளர்நாளையிலே
விஸ்வாமித்திரர்செய்யும் வேள்விக்கெடுக்கும்படிக்குத்
தாடகைசிறுநீரால் தானிருப்பாள்அம்முனியும்
தாடகையைச்சங்கரித்துத் தனிம்வேள்விமுடிப்பதற்கு
தசரதன் தன்னிடத்திற் சார்ந்துவிஸ்வாமித்திரரும்
இராமலரையும்லட்சுமணரையுந்தானழைத்து

சந்திரவழுதியென்றுநாசன் சென்னிமுடிந்தபின்பு
பிள்ளையைநோக்கி விபரந்தவருகையிலே
கலியாணம்பண்ணவென்று காரணமாய்வருகையிலே
ஸ்ரீராமர்தன்பாதந் சிறப்பாகப்பட்டவுடன்
பெண்ணாகிவருவாய் போய்விடுமென்சாபம்
அப்போதுநாமுன்னே யறைந்துமேகொள்வமென்ன
கருங்கல்லப்பாறையாய்ப் போனாளேகன்னிகைதான்

விருத்தம்.

இந்திரலோகம்விட்டே யெழிலுறுபுவனஞ்சுற்றித்
தந்திரவானமெல்லாந் தயவுடன்வரும்போதந்த
மந்திரரிஷிப்பெண்வந்து மலர்கொய்யும்போதுகண்டு
இந்திரன்மயக்கிவாடி யேகினானிருப்பிடத்தில் (௧)

இருப்பிடந்தேடிப்பார்த்து இரவுதான்கோழிபோலே
உருக்கொண்டுகூவியந்த ரிஷியையன்புடனேநோக்கி
மருக்கின்னவன்பால்வந்து மயங்கியேசெல்லும்போது
செருகலாரிஷியுங்கண்டு சினத்துடன்சாபஞ்செய்தார். (௨)

செய்ததோர்சாபம்காம திருடனாய்வந்ததாலே
வெய்யதோர்பெண்மேல்மோக விருப்பமுமில்லையாகத்
தய்யலார்மேனியெல்லாந் தயருடன்யோனியாகும்
பொய்யல்லவென்றுசொல்லிப் போவெனவிடைகொடுத்தார். (௩)

இந்தநற்சாபத்தாலே யிந்திரன்தலைகவிழ்ந்து
அந்தநல்ரிஷியைத்தானு மடிபணிந்தவனேகேட்கத்
தந்திரவிசனரைத் தானுமேபூசைசெய்தார்
சுந்தரமேனியெல்லாந் துலக்குமாயிரங்கண்ணாமே (௪)

(வசனம்.) இதினுடைய விபரம் எப்படியென்றால் தேவேந்திரன் மாமவராலே தபசுசெய்யப் புறப்பட்டுவருகிறவழியிலே மருந்து மாலைக்கௌதமரிஷி பத்தினியான அகலிகைப்பெண் ரிஷிக்குமலர்க் கொய்ய வந்தவிடத்தில் இந்திரன் அந்தப்பெண்ணினுடைய அழகு சவுந்தரியங்களைக்கண்டு தவசுமறந்து புத்திர சினைவும்விட்டு மையல் கொண்டு அந்தப்பெண் வாழுகிறவிடத்துக்குப்போய்க் கோழியாய் நின்றுகூவி ரிஷியை வெளியில் புறப்பட்டு ஸ்நானஞ்செய்யப்போகப் பண்ணுவித்துத் தான்சேரலாமென்று யோசித்துச் செய்தான். அப்படியே ரிஷியும் விடிந்துபோச்சுதென்று கெங்கையில் வரும்போது கெங்கை நித்திரை செய்கிறதைப் பார்த்துப் போட்டு நந்தவனஞ் சென்று புஷ்பவிரிவு பார்ப்போமென்று பார்க்கும்போது புஷ்பங்களெல்லாம் அரும்புமயமா யிருக்கிறதைக்கண்டு இது ஓர் காரணமாயிருக்குமென்று தன்னுடைய இல்லிடமாகிய ஆச்சிரமத்துக்குவருவதற்கு முன்னமே இந்திரன் அகலிகையிடத்திற் றன்னுடையவிரக தாபத்தைச் சொன்னதில் அவள் மனம்நொந்து சிலகொடுமையான வார்த்தைகளைச் சொல்லுகிறநேரத்தில் ரிஷிவருகிற சாடையை இன்

சேர்த்துக் கொள்ளுகிறோமென்று விடைகொடுத்தபடியே சிலநாட் சென்று ஸ்ரீராமர்வந்து தாடகையைக்கொன்று விஸ்வாமித்திரற்குச் சந்தோஷஞ்செய்வித்து மிதிலையிற் சீதையைக் கலியாணஞ்செய்ய வரும்வழியில் ஸ்ரீராமனுடையபாதம் அகலிகைப்பெண்பேரிலேபட்டுத் தன் சொரூபமானதை ஸ்ரீராமர்பார்த்து இதென்னவிதமென்று விஸ்வாமித்திரரைக்கேட்க அகலிகையானவள் நடந்த விருத்தாந்தமெல்லாம்சொல்ல, அப்பால் ஸ்ரீராமமூர்த்தி இருடியினிடத்துக்குப்போகும்படி உத்தரவுகொடுக்க, அப்படியே இருடியினிடம் அகலிகைப்பெண் வந்துசேர்ந்து வாழ்ந்துக்கொண்டிருந்தாள். அப்பால் தேவேந்திரன் நடக்கிற விருத்தாந்தமும் அதின்மேல்நடக்கிறகதையுஞ் சொல்லுகிறோம் கேட்பீர்களாக.

நடை

இந்திரனார்தன்கதையை யியம்புகிறேன்கேளுமினி
ஆயிரம்யோனியுங்கண் ணாகுமென்றமாமுனியை
தெண்டனிட்டுக்கொண்டு திருப்பினார்பூசைசெய்ய
தானுமைமாலயனைத் தானேமனதிலெண்ணி
ஆணவமாயைதன்னை யகலவிட்டுயோகமதாய்த்
தானுவமாயைதன்னைத் தாரணியிலுண்டாக்கித்
தான்செய்தகுற்றமெல்லாந் தானுமேவதீருமென்று
வனத்துரிஷிசாபமதை மாலயனேதீருமென்று
மெத்தவேபூசை விரும்பியேசெய்யலுற்றார்
பூசைதனைச்செய்து புதுமைதனைக்கண்டுமிகத்
தானுவுமாலயனுந் தயவுடனேவந்துதித்து
ஆயிரம்யோனிதனக் காயிரங்கண்ணாகுமென்றார்
ஆயிரங்கண்ணாகுமென்ற அம்மூவரைப்பணிந்து
ஆயிரங்கண்ணுடைய அயிராவதத்தோனும்
வரமதிகம்பெற்று வாழுகிறநாளையிலே
அகலிகைசாபம் பிடித்துதேயங்கேரம்
தெய்வலோகப்பட்டணத்தில் வாழுகிறதேவருக்கும்
எல்லார்க்குமாகப் பிடித்ததேசாபமது
தான்மலடாய்நின்று தவிக்கிறபுதுமையைப்போல்
வானுலகமெல்லாம் மலடாகப்போனதுவே
தன்மலடுமல்லாமல் தரணியெல்லாந்தான்மலடாய்
பூமிவிளையாமல் பொன்மாரிபெய்யாமல்
காமனெரிந்ததுபோல் காடுகளெல்லாமெரிய
காய்க்குமரங்களெல்லாங் காயுதிர்ந்துபோனதுவே
பாற்பசுக்களெல்லாம் பால்வற்றிநிற்குதுகாண்
பட்சிபறவையெல்லாம் பாழ்மலடுதானாக
கரடிமிருகமெல்லாங் கடுமலடாய்ப்போனதுவே
புல்லுங்கருகிமிக பூக்களுமேயில்லாமல்
இந்திரலோகமெல்லா மீடழிந்துபோனதுவே

இந்திரனார்தேவி இதுவெல்லாந்தான்தெரிந்து
இந்திராணியென்று இளங்கோதைகளாயிருக்க
அனர்த்தம்பண்ணாதீர் ஆனதொருஇந்திரரே
ரிஷியினதுசாபம் பலிக்குமேயிப்போது
பத்தினிசாபம பலித்ததுயுங்கண்டீரோ
அவர்களுடசாபம அவனியெல்லாஞ்சூழ்ந்ததுமே
மதிகொண்டுவாழ்க்கையிலே மதிமயங்கிப் போனீரோ
தவசுமறந்து தட்டழிந்தகாரணந்தால்
மனதிற்றுயரமதாய் மலடாயிருந்தோமே
இடுவார்கள்பிச்சைதன்னைக் கெடுவார்தடுத்தாற்போல்
படுவார்கள்பாடெல்லாம் படவேமோயிந்திரரே
அம்பலத்தில்நின்றாலும் அநியாயஞ்செய்தவர்போல்
ஊராருடமைக்குப் பேராசைகொண்டவர்போல
தேவர்களெல்லாஞ் சேரமடலாமேனும்
இந்தப்படிசொல்லி இந்திராணிதான்புலம்ப
இந்திரனுங்கேட்டு இலச்சையுற்றுத்தான் வாடி
எந்தவிதியாலே எனக்குமேயிந்தவினை
வந்ததென்று மனக்கவலைதான்கொண்டு
மானேகுயிலே மரகதமேமேகலை
தேனேகனியே தெவிட்டாதவெள்ளமுதே
அந்தரம்பைமாதை யடிமைகொள்ளும்பெண்ணே நீ
புத்திரனில்லாமல் பூதலத்தில்வாழ்வதற்கு
வரத்தினையுண்டானாலும் வாழ்வல்லவுண்டாமே
சேனைபலதானச் சிறுவனொருவனில்லை
மைந்தனில்லாவீட்டில் மறைமோர்பொசிப்பதில்லை
மகனில்லாவீட்டில் மற்றொருவர்போகாமல்
வள்ளத்தனமயிலே வகையொன்றுசொல்லுகிறேன்
அரனுரைநோக்கி யதிகதவஞ்செய்தாக்கால்
அம்மையுமைபார்வதியாள் அதிகதவஞ்செய்தாக்கால்
எல்லாப்பதமும் இயல்புமிகவுண்டாகும்
என்றுமினையாட்கு இப்படியேசொல்லியபின்
துய்யமதியுடையாள் சுந்தரியுமேதுசொல்வாள்
மைந்தனில்லாத மனைகானாவான்பயிர்போல்
வாடிமிகத்தளர்ந்து மயங்கிழுகப் பாடி
என்றுரைத்தசுந்தரிக்கு இந்திரனுமேதுசொல்வார்

விருத்தம்.

மங்கையேசொல்லக்கேளாய் மைந்தனில்லாமையாலே
சங்கையாய்வாழ்ந்திருந்துந் தரணியிலவசையும்ஆச்சு
கங்கைசேவணியர்பாதங் கண்டுமேவரந்தைப்பெற்று
இங்குநாம்வருவோமென்றே யேகினார்கைலேயதில்

நடை.

சென்றுசிவன்கைலை சேர்ந்தேஇருவருந்தான்
சந்ததியைவேண்டித் தவம்பெறவேவேண்டுமென்று
சங்கரனாரஞ்செழுத்தைத் தங்கள்மனதில்வைத்து
சிவனுடனுமையாளைச் சிந்தையிலேதானினைந்து
இந்திரனுந்தேவியுமாய் ஈசுரர்பாலேகலுற்றார்
இந்தப்படியே இருபேருமொற்றுமையாய்
கயிலைதானேகிக் கடுகவேதானடைந்தார்
கடிதாய்வழிநடந்து கயிலைக்குப்போனார்காண்
தென்கயிலைச்சேர்ந்து சிறந்தஇருபேரும்
நந்திதனைக்கண்டு நமஸ்கரித்தார்நேரம்
நின்றுகைகூப்பி நெடுமூச்செறிந்துநின்றார்
நெடுமூச்செறிந்துநொந்து நின்றவரைத்தான்பார்த்து
தமொற்றரிக்கித் தனதாகவார்த்தைசொல்லி
தேவியுநீயுந் தேடிவந்தகாரியமேன்
தேடிவந்தகாரியத்தைச் செப்புமெனவுரைத்தார்
அவ்வார்த்தைகேட்டு அமரர்கோனேதுரைப்பான்
எவ்வார்த்தையென்று இயம்புவேனடியேன்
சீராயுரைசெய்சாற் சிரிப்பார்களெல்லோரும்
மனோசையாலே வருந்திநடந்துவந்தோம்
புத்திரனுமில்லாமல் பொன்னுலகையாண்டிருந்தோம்
பொன்னுலகையாளப் புத்திரனுதவுமில்லை
சந்ததிக்காகத் தவம்பெறவேவந்தோங்காண்
எந்தனைக்காத்து இரட்சிக்கவேண்டுமென்றார்
அந்தமொழிகேட்டு அருள்நந்தியேதுரைப்பார்
வந்ததுநன்றனறு மாநுமக்குண்டாகும்
சிவனுடனுமையாளைச் சிந்தையிலேதானினைந்து
தவமாய்மிகவும்நல்ல தரையில்மிசையூசிவைத்து
ஊசிமேல்நின்று உற்றதவஞ்செய்வீரானால்
சிவனுடனுமையாளுஞ் சிந்தைமிகமகிழ்ந்து
சந்ததிபாக்கியமுடன தந்தேயருள்புரிவார்
இந்தப்படிநந்தி யெடுத்துரைக்கஅப்போது
நந்தீசர்சொன்ன மொழிப்படியேநாங்கள்செய்வோம்
என்றெனவேயிந்திரனும் நாயகியுமப்போது
ஆற்றில்முழுகி யஞ்செழுத்தைநெஞ்சில்வைத்து
ஊசிநிறுத்தியதில் ஒருகாலைத்தானூன்றி
நின்றார்தவசு நிருமலனைத்தானினைந்து
இந்திராணிதானும் இருந்தார்கடுந்தவசு
இருபேருமொன்றாய் இருந்தார்கடுந்தவசு
ஈசனையுமையவளை ஏகமனதில்வைத்து
உள்ளங்காலுச்சி யொன்றுந்தெரியாமல்
தள்ளாதபுற்றுந் தானேவளர்ந்ததுகாண்

வேதநகளோடி வியன்மரங்களுண்டாகி
பாருக்குள்வேரோடிப் படரத்தவசுசெய்தார்
அந்தத்தவத்தருமை யாரறிவாரில்லை
ஆவபொழுதிலிறைவன் அவன்மனைவிதன்னுடனே
எந்தப்படிதவங்கள் செய்வோமெனநினைந்து
சுந்தரிபாள்தன்னுடனே சொல்லிவிசாரமுற்று
பாதாளங்கோலறவெட்டி பாம்பாயனல்வளர்த்து
வேதாளஅக்கினிமேல் மேலேபடர்ந்தெரிய
ஈசனேபிள்ளைபருளென்றேதவசிருந்தார்
தண்ணீர்அருந்தாமல் சருகும்பொசிபாமல்
இந்தப்படிதவசு இரண்டாயிரம்வருஷம்
அந்தத்தவத்தருமை யாரறிந்தாளறிந்து
பார்வதிக்குமப்போ பரமனருள்செய்தாரே
பெண்ணேயவரருகே போவோமெனவுரைத்து
கண்டார்சிவனுங் கனிவாயுமையாளும்
முப்பத்துமுக்கோடி தேவர்கள்போற்றிநிற்க
நாற்பத்துநாற்கோடி ரிஷிகளும்நயந்துதொழ
தவத்தருனமபார்த்துச் சந்தோஷமுண்டாக
உமையாளும்அங்கே யுத்தரங்கள்சொல்லுகிறாள்
பொன்னுலகையாண்டுமிகப் போகம்படைத்தருளி
மன்னுமுடித்தேவரெல்லாம் வந்துதொழுதேத்த
இந்தப்படிபலத்தை யேதுக்குத்தான்கொடுத்தீர்
புத்திரனில்லாச்செல்வம் போதக்கொடுத்தீரே
புற்றுவளர்ந்து போதமரமுண்டாகி
கண்ணீரொழுகிறதுங் கண்ணிலுற்றானுமென்று
சிவனாரிடத்தில் செப்பினாள்பார்வதியும்
உள்ளபடிசொன்னாய் உமையவளேயென்றுரைத்தார்
கள்ளனிவனிந்திரனுங் கர்ங்குற்றஞ்செய்ததுண்டு
மானேயவனுட மனதின்படிசெய்வோம
தேனேயவன்செய்த தீவினைகள்மெத்தவுண்டு
ஒன்றும்அறியாமல் உபாயமாய்ச்சொன்னதென்ன
ஆனால்உனக்காக அருள்செய்வோங்கண்டாயே
என்றுசிவனார் இரங்கியுரைத்தனர்காண்
உமைபாளுமங்கே யேதுரைப்பாளுண்ணடுங்கி
ஈசுரரேயும்மடியார் ஏதுபிழைசெய்தாலும்
நேயமுடனதனை நீர்பொறுக்கவேண்டாமோ
என்றுமையாள்சொல்ல இறையோன்மனமகிழ்ந்து
மன்றல்செறிவெள்ளி மலைதனிலேவீற்றிருந்த
நந்திதன்னையழைத்து நல்லகொருவிந்திரனைக்
கூட்டிவரச்சொல்லிக் கொடுத்தான்காண்வுத்தரவு
வென்றிபுனைநந்தி விரைந்தோடியேயழைக்க
இந்திரனுந்தேவியுமாய் இன்பத்துடனெழுந்து

நக்ஷத்திரர்தம்பின்னே நன்றாய்நடந்தனரே
கந்தமலர்க்குழலுந் திகழ்ந்தேவதானடந்தார்
கூட்டியேதானவர்வந்து கோமானைத்தேவியுடன்
தேடுபுகழ்நந்தி திருவாசலில்நிறுத்தி
எண்ணாத்தொலையாத இடியேறுதாமுழங்க
வண்ணக்கடல்முரசு வகைவகையாய்த்தான்முழங்க
சிந்தைமகிழ்ந்து திருநந்திதான்கொலுவில்
வந்துபுகுந்து வலக்கைப்பிரம்பதினால்
இதங்கள் அறியாமல் எதிர்த்துநின்றதேவர்தம்மை
ஒதுக்கிவிலக்கி யொருபால்நிறுத்தினரே
பின்னேவிலக்கி நிறுத்தினார்விஞ்சையரை
யுற்றபேர்பால் ஒதுக்கியொருபுறமாய்
சென்னிவணங்கித் திரண்டுதொழுந்தேவர்களை
யுன்னியடித்தங் கொருபால்நிறுத்தியபின்
காலயமதூதரையுங் கடக்கநிறுத்தினரே
வருணன்முதல்மற்றவரை வாக்காய்நிறுத்தியபின்
ஈசனுக்குத்தோழனு மேற்றகுபேரனையும்
உருத்திரரையும்பக்கத் துண்மையாய்த்தானிறுத்தி
ஆனைமுகத்தானுடனே ஆறுமுகத்தனையும்
சேனைநிமைத்தியிலே சிறக்கஇருத்தியவர்
பக்கத்தில்வீரபத்திரனைத்தானிறுத்தி
மேனகையினோடு விளங்கும்அரம்பையுடன்
ஆனவூர்வசியும் அந்தமுள்ளதிலோத்தமையும்
நாடகங்களாடுகந்த நந்தன்சிவசபையில்
தேடுபுகழ்நந்தி சேர்ந்தபலநாதர்களை
மிஞ்சுநவக்கிரக வேடிக்கையுள்ளவரை
அஞ்சாமற்சொல்லி அடைவாய்நிறுத்தினர்காண்
காளிகளையெல்லாம் கலக்கநிறுத்தியபின்
சத்தமகாரிஷிகளையுஞ் சங்கையுடனேயிருத்தி
மற்றமுள்ளபேர்களையும் வகையாகத்தானிறுத்தி
விருப்பமுடன்நந்தி விண்ணவர்கோன்கிட்டவந்து
வந்தானோர்பாதம் வணங்குவாயென்றுசொல்ல
அந்தப்படியே யானோர்திருமுன்பு
சென்றுபுகுந்திந்திரனுந் தேவியிந்திராணியுமாய்
மன்றில்விழுந்து மலரடியைப்போற்றிசெய்ய
சிந்தைமகிழ்ந்து சிவனுமெழுந்திரென்றார்
திருவாய்மொழிகேட்டு தேவியுடனிந்திரனும்
எழுந்துநின்றுகைகட்டி யெதிராகவேநிற்க
வந்தகருமத்தை வகையாகச்சொல்லுமென
புத்திரனுமப்போது இப்பாகச்சொல்லுகிறான்
புத்திரனில்லாமற் பொன்னுலகையாண்டிருந்தேன்
இத்திரனில்லாதார் பொசிப்புப்புழுவல்லவோ

எத்தனைதான்வாழ்வு இலங்கப்பாக்கியம்பெற்றாலும்
புத்திரனையில்லாதே புலைநரகிலேபோவோமே
சந்ததிதான்தாருமெனத் தார்வேந்தன்கேட்டதற்பின்
இந்திரனேசந்ததிதான் தந்தோமெனவுரைத்தார்
சந்ததிதந்த சங்கரனார்சொற்படியே
இந்திரனுந்தேவியுமா யின்பமுற்றுமீண்டாரே
மீண்டுமேநாங்கள் விரைந்துவரும்வழியில்
ஊர்பதியைநோக்கி யுலாவிவந்தாரப்போது
காமதேனுநற்பசுவைக் கயிலையிலேவரவழைத்து
பசுவின்முகம்பார்த்து பரமனருள்புரிவான்
சந்ததியில்லாமற் றவசுசெய்தஇந்திரற்காய்
உன்னையவர்களுடன் அனுப்புகிறோமென்றுசொல்வாய்
அன்புடனேநீபோய் அங்கிருந்துதான்வளர்ந்து
பாலகனையீன்று பாங்குடனேதான்கொடுத்து
வந்துவிடுநீயு மாதேயிளம்பசுவே
என்றுசிவனார் இவ்வார்த்தைசொல்லியபின்
சிவன்றனைப்பார்த்து நெடும்சத்தானெறிந்து
தோத்திரங்கள்செய்து சொல்லுகின்றதப்பசுவும்
பூலோகம்போயிருக்கப் பொறுக்குமோயென்னுடல்தான்
பூலோகம்போயிருந்து புத்திரனையீன்றபின்பு
எனக்குமேமோட்சகெதி யெப்போவெனக்கேட்க்
அப்போதேசிவபெருமான் அன்புமிகப்பெருகி
வாராய்பசுவே வருந்திமெலியாதே
புத்திரனையீன்றவுடன் பூந்தேர்அனுப்புகிறோம்
உன்னைநாமும் உடனழைத்துக்கொள்ளுகிறோம்
என்றுசிவனார் எளிதாயுரைத்தபின்பு
அந்நேரநற்பசுவும் அறிவுமிகவுண்டாகி
போய்வருவேனென்று பொருந்திவிடைகேட்டதற்பின்
அந்நேரமேசிவனார் அன்புவிடைதான்கொடுத்தார்
பசுவுமேயப்போது பரமனருட்படியே
இடியுங்கடலும்போ லெங்குமேதான்முழங்க
அவரடிபின்பின்னே யலறித்தொடர்ந்ததுவே

விருத்தம்.

அந்தநற்கயிலைவாசன் அருட்படிகாமதேனு
இந்திரன்பின்னேநல்ல விளங்கன்றாய்வேடங்கொண்டு
பந்துபோற்குதித்துமெள்ளப் பாரினில்வந்துமேவ
வந்ததோர்பசுவையிந்திரன் வகிசையாய்நிதிகொள்வானே.

வசனம்.

அதேதெப்படியென்றால் சுவாமிகயிலையங்கிரிவாசரான பரமேஸ்வரர்காமதேனுவாகிய பசுவைவரவழைத்துப் புத்திர தவஞ்செய்த இந்திரனிந்திராணிக்குநீபோயிருந்து ஒருபுத்திரனையீன்றுகொடுத்துவா

வென்றுவிடைகொடுக்க அப்போ பசுவானது எனக்குமோட்சகெதி எப்போவென்றுகேட்க பரமேஸ்வரரும் அப்போது புத்திரனைப்பெற்றுக்கொடுத்தவுடனே பூந்தேர்அனுப்பியுன்னை இவ்விடம்வரவழைத்துக்கொள்ளுகிறோமென்று வாக்குசொல்லி விடைகொடுக்க அப்படியே விடைவாங்கிக்கொண்டு இளங்கன்றுகவேடங்கொண்டு அண்டபுவனங்களெல்லாம் இடிபோல முழங்கத்தக்கதாக பந்து குதித்ததுபோலே இந்திரன் இந்திராணிபோனவழித்தடம்நோக்கி அவர்களிருவரையுங்கண்டவுடனே அவாளிருவரும் பசுவாகியகன்றைக்கண்டு இதுகாரணமாயிருக்குதென்று யோசனைசெய்து சுவாமி கயிலையங்கிரிவாசராகிய பரமேசுரரும் உமையாளும் அனுப்பிவைத்ததாய்க்காணப்படுகிறதென்று இருவரும் ஆனந்தங்கொண்டாடிப் பசுவைக்கட்டிமுகந்து தாங்கள் கூடவே கூட்டிவருகிறார்கள்-எ-று. அப்பால் நடக்கிற அதிசயங்களை இனிமேல்வெகுவிஸ்தாரமாகச்சொல்லுகிறோம்.

நடை.

வந்தவொருகன்றை வாரியெடுத்தணைந்து
ஆவிபெடுத்து ஆகமெல்லாந்தான்குளிர்ந்து
இன்றுநமே யீசர் ஈந்தருளுஞ்செல்வமென்று
கன்றையெடுத்துக் கடுகவழிநடந்தார்
பூபாலரெல்லாம் பூமாரிபெய்தனர்காண்
மற்றுமுள்ளாரெல்லா மனமகிழ்ந்துகொண்டாட
பிரமாமுதலானோர் பிரியமுடன்பார்த்துநிற்க
நடந்தனரிருவருமே நல்லுலகந்தானோக்கி
ஒருவர்க்கொருவர் உவந்துவந்துதானபேசி
சந்தடியாய்வந்தகன்றைத் தான்கொண்டுசென்றார்கள்
பட்டணத்திலுள்ள பரிஜனங்களெல்லோரும்
இந்திரனிந்திராணி யிவர்கள்வரவுகண்டு
சந்நிபாக்கியமுந் தான்பெறுவாரார்கள்
என்றுசொல்லிப்பப்போ இயல்பாய்ப்பறைபறைந்தார்
தேசமெல்லாந்தானறிய சிறப்பாய்ப்பறையடித்தார்
பறையோசைகேட்டவர்கள் பாக்கியம்பெற்றோமெனவே
பட்டணஞ்சென்றமாதர் பதியுமிந்திராணியுமாய்
சிங்காதனத்தில் சிறக்கவேதானிருக்க
அம்பொற்பதியான அழகானகற்பகக்கீழ்
செம்பொற்பதியில் சிறப்புடனேதானிருக்க
நல்லதொருசுந்தரியும் நன்றாய்மனமகிழ்ந்து
சங்கானர்தங்களுக்குத் தபவாகக்கொடுத்தகன்றை
மங்காதகன்றை வளர்த்தெடுக்கவேணுமென்று
தாதிபரையழைத்து தபவாயுரைத்தனர்காண்
மானினியீர்நீங்கள் மகிழ்ந்துமிககொண்டாடி
கானகத்திலோட்டாமல் கனமாய்வளர்க்கவென்று
சாற்றுமந்தவார்த்தைதன்னைத் தானகேட்டுத்தாதியர்கள்

போற்றியெடுத்தணைத்து பொன்போல்வளர்க்கலுற்றார்
சிருடனேபோற்றித திரமாய்வளர்க்கலுற்றார்
ஒருநாளுக்கொருநாள் ஓங்கிவளர்சந்திரனைப்போல்
அருமையாய்க்கன்றுதனை அன்பாய்வளர்த்தனர்காண்
பேரிடவேணுமென்று பேசிமுகூர்த்தந்தானைபார்த்து
பஞ்சாங்ககாரரையும் பாங்காயழையுமென்றார்
வேதப்பிராமணரை விரைந்தேயழையுமென்றார்
சாத்திரவாதியெல்லாந் தாமேயழையுமென்றார்
தபோதனரையெல்லாந் தானேயழையுமென்றார்
கட்டியக்காரர்சென்று கடிந்துமிகவோடி
பாப்பாரையெல்லாம பாங்காயழைத்துவந்தார்
தபோதனர்கேட்டவுடன் சந்தோஷமாகவந்தார்
சாத்திரவாதியெல்லாந் தானேதான்வந்தார்காண்
நாளுமுகூர்த்தமும்நல்ல தினம்பார்த்திருந்தார்கள்
ஆர்ப்பரியேமென்று ஆலோசனைசெய்தார்
அப்பொழுதுவியாச பகவான்அருளினேறு
இந்திரன்தாயார் இளங்கொடியாளதன்பெயரை
இடுமென்றுசொன்னபடி யெல்லாருஞ்சொன்னார்காண்
அந்தப்படிபெயரை அழைக்கவேவேணுமென்று
வைகாசிமாதம் வளர்ந்தஇருபத்தொன்றில்
சுக்கிரவாரமதில் சூழ்ந்ததிருவாசகத்தில்
அமுர்தகனயோகம் அன்பாயிருக்குதென்றார்
அந்தப்படியே அவர்கள்மொழிதப்பாமல்
பட்டணமெல்லாம் பதிவாயலங்கரித்து
கோடித்தெல்லோர்க்குங் கொடுத்தார்தட்சணைகள்
தெட்சணைகொடுத்தவுடன் திருப்பெயரைத்தானழைத்தார்
மாவேந்திரியென்று வரவழைத்தாரப்பசுவை
அழைத்தவுடனே யன்னவோருந்தானமிட்டார்
மாதானங்கோதானம் வஸ்திரதானமுதல்
வாத்தியங்களெல்லாம் வரிசையாய்த்தான்முழங்க
பதினெட்டுவாத்தியமும் பாங்காய்முழங்கிடவே
நாடகசாலைப்பெண்கள் நாட்டியங்கள்தானுட
வோமங்கள்பூசைகள் ஒன்றுந்தவறாதபடி
அன்னதானங்கள்முதல் அன்பாய்க்கொடுத்தார்காண்
பட்டுபட்டாவளியும் பாங்காய்க்கொடுத்தனரே
இந்தப்படியே இருபதுநாள்வரைக்கும்
மைதவழுங்கன்றுக்கு வகையாய்ப்பணிபூண
பொன்னுலேதம்பும் புரிகயறுபோட்டார்காண்
நாலுகாலிற்சிலம்பும் நல்லதொருதங்கமதாய்
மேனியெல்லாந்தங்கமதாய் விரைந்துமேதானெழுதி
நவரத்னவகைகளெல்லாம் நன்றாகத்தானழுந்தி

ஆபரணதியெல்லாம் ஆணிமுத்துவயிரமதாய்
கொப்புக்குநல்ல கோமேதகமெழுதி
காலுகாலிற்சிலம்பும் கல்லிழைத்த வயிரத்தால்
வாரியேபூட்டி வளர்த்தார்கள்நற்பசுவை
பாலமுதமூட்டி பதிவாய்வளர்க்கையிலே
பூபதத்துள்ளே போற்றிவளர்க்கையிலே
இந்தவரிசையா யிதமாய்வளர்க்கையில்
கண்ணைப்போற்றிக் கருணையுடனேவளர்த்தார்
நாலிரண்டுகோனையிலே நற்பசுவுந்தான்வளர்ந்து
திங்கட்பிறைபோலச் சீர்பெறநுதானவளர்ந்து
பிள்ளையென்றுசொல்லிப் பெருமையுடன்தான்வளர்த்தார்
இந்திராணிசெய்யும்வகை யெடுத்தன்றுதான்கேட்டில்
நித்தப்படிக்கும் நியமநிஷ்டைசொல்லுகிறேன்
பொய்கைதனிற்சென்று போதவேநீராடி
சிவபூசைதவபூசை செப்பமுடன்செய்தபின்பு
தங்கச்செம்புதன்னிற் றூய்மைஜலங்கோரி
புட்பாதிகளெல்லாம போதவேகொண்டு
பசுவினிடபாதமதைப் பாங்காகச்சுத்திசெய்து
பத்திரபுட்பமதைப் பாங்குடனேதான்சாத்தி
சிவனைநினைத்துத் தோத்திரங்கள்செய்துவந்தான்
இந்தப்படியா யிருக்குமந்தவேளையிலே
பசுவின்முகத்தைப் பார்த்துமனஞ்சலித்து
நெடுநாளுந்நாளுச்சே நீயுமெனைப்போலே
நிற்கும்வகையேதென்று நிமலனையேதான்தொழுவான்

விருத்தம்.

அய்யய்யோசிவனேநான்செய் யறத்தினுக்கொடுமையுண்டோ
வையகந்தனிலேதான் மலடியென்றெனைவைத்தாய்
துய்யநற்பசுவுக்குடச் சுரப்பிலாமலடாய்நிற்கச்
செய்யுமாறேதோவென்று சிந்தையும்நொந்துசொல்வாள்.

வசனம். அகோஇதபபடியென்றுல்தேவேந்திரனும்இந்திராணியும் அநிகத தவசுசெய்து வரமபெற்றுத் தங்கள் பதியை நோக்கி வரும் போது சுவாமி உத்தரவு கொடுத்தனுப்பிய காமதேனுவாகிய பசுவா னது தங்களிடஞ் சேர்ந்ததைக்கண்டு சுவாமியும் உமையாளும் அனு ப்பினரென்று மகாசந்தோஷத்துடன் அவர்களும் போற்றிவளர்க்க நெடுநாட்சென்றும் நம்மைப்போலே நாட்வளர்த்தபசுவானதும் மல டாய்நிற்கிறகாரணம் என்னமோவென்றுவையகத்திற் பேரெடுத்தது மல்லாமல் தவசுசெய்து கிடைத்தபசுவும் இப்படி நிற்குதென்று இ ந்திரனிடத்தில் இந்திராணி நெடுமூச்செறிந்து அவர்களிருவரும்புல ம்பித்தவிக்கிறார்கள் என்றவாறு அப்பால் நடக்கும் அதிசயத்தை விவரமாய்ச்சொல்லுகிறோம்.

(நடை) நாம்நாமலடிருந்தோம் நம்வளர்த்தநற்பசுவும்
தயத்தருமைபாய்வந்த காமதேனுதான்மலடாம்
மலடாகின்ற மயக்கமதைநான்பார்க்க
விதியோவிருவும் விளம்பீரோவென்றுசொல்லி
இந்திரன்கேட்டு யேங்கிமுகம்வாடி
நாகமடந்தைபரே நானென்றுசொல்லுகிறேன்
இதுவரையும்பாலன் எமக்குவரக்காணேமே
இன்னமும்நான்போயி யெங்கள்பரமேஸ்வரன்பால்
தவசுசெய்யநான்போவேன் தப்பாதிளங்கொடியே
சங்கரனைநோக்கித் தவசுமிகச்செய்து
வண்மையுள்ளகானகத்தில் மகாதவமாப்நானிருந்து
பூங்காவனந்தேடி போகிறேனென்றுசொல்லி
கமண்டலமும்புலித்தோலும் கையிற்பிரம்புடனே
கப்பறையுமபுத்தகமும் கையில்மழுவாளுடனே
பத்தினியக்கினியைப் பாங்காகத்தான்வளர்த்தி
இந்திராணிதன்னிடத்தில் விடைபாயனுப்பினன்காண்
வந்துமேகானகத்தில் வாய்த்ததவசுசெய்ய
சிவனைநோக்கித் தெண்டனிட்டுத்தவமிருந்தான்
இந்திரனுங்கானகத்தி லிசைவாய்த்தவமிருந்தான்
வாசிமைநோக்கி வாகாய்த்தவஞ்செய்தான
அஞ்செழுத்தைநெஞ்சில்வைத்து அரனைமிகனினைந்து
ஆராலுமுடியாத அதிகதவஞ்செய்யலுற்று
சற்றுமசையாமல் தவஞ்செய்தானப்போது
முப்பத்துமுக்கோடி தேவர்களுமூத்தோரும்
நிருபன்குபேர நிருதிதிசைபாலரும்
சந்திரனுஞ்சூரியருஞ் சத்தமகாமுனியும்
தேவர்களெல்லோருஞ் சேரவேதான்கூடி
மூவரையுந்தெண்டனிட்டு முறைமையைச்சொல்லுகிறார்
சித்தமிரங்குமையா தேவேந்திரனும்
புத்திரவாஞ்சையினால் பூமிமறந்துவிட்டார்
மைந்தனைவேண்டி மகாதவசு செய்கிறார்
அப்போதரனார் அகமகிழ்ந்துசொல்லுகிறார்
நந்தீசர்தன்னை நயமாகத்தானழைத்து
வள்ளுவனையிங்கே வரவழையுமெனவுரைத்தார்
வள்ளுவனையப்போ வரவழைத்தாரன்னேரம்
செய்யசிவனாருந் திருவாய்மலர்ந்தருளி
சித்திரபுத்திரனை தேடியழையுமென்றார்
சித்திரபுத்திரரைச் சிறப்பாகக்கண்டான்காண்
அத்தனரும்மை யழைத்துவரச்சொன்னார்காண்
சித்திரபுத்திரருஞ் சிந்தையகமகிழ்ந்து

பாதமதில்வீழ்ந்து பணிந்துகண்டார்புத்திரரும்
தேசம்விளையாடிவந்த சித்திரபுத்திரனே
கணக்காற்பெரியவனே காரியத்தில்வல்லவனே
தேவேந்திரனுமங்கே திகைக்கிறான்பிள்ளையன்றி
மைந்தனைவேண்டி வருந்துகிறானென்றுசொல்ல
சித்திரபுத்திரருஞ் செய்தியொன்றுசொல்லுகிறார்
அரியதவம்பண்ணினாலும் ஆவதுண்டோயிந்திரற்கு
மைந்தன்பிறக்க வழக்கில்லைநாயகமே
என்றருளிச்செய்ய இருந்தவர்களெல்லோரும்
சத்தியருள்கொண்டு தவஞ்செய்தயிந்திரற்கு
புத்திரனைத்தான்கொடுப்பாய் பூதநாதாவென்ன
சிவனாருமங்கே திருவாய்மலர்ந்தருளி
பூமிவிளையாடிவந்த புண்ணியரேநீருமொரு
தீமையைநீக்குமென்று திருவாய்மலர்ந்தருளி
பாலகனாய்ப்போய்ப்பிறக்க பரமன்விடைகொடுக்க
புத்திரனாகப்போய்ப்பிறக்க சிவனார்விடைகொடுக்க
தேவேந்திரன்வயிற்றிற் சென்மிக்கைதன்மமல்ல
இந்திரற்குப்பிள்ளை யெழுதவில்லைகணக்கிலென
அந்தமொழிகேட்டு அரனாருந்தான்மகிழ்ந்து
எந்தவகையாலும் இந்திரற்குஅன்புடனே
செந்தாமரைப்பூ தினம்பூர்க்கும்பொய்கையிலே
இந்திராணிதான்வளர்த்த இளம்பசுவுமப்போது
தண்ணீர்குடிக்கத் தான்வருமேயந்நேரம்
தாமரைப்பூவாகத் தண்ணீருடன்கலந்து
ஆவின்வயிற்றில் அவதரிக்கஅற்புதங்காண்
வளர்த்தபசுவயிற்றில் வருவாயெனவுரைத்தார்
ஆகிலடியேன் அருள்பெற்றேனென்றுசொல்லி
கூறப்பெற்றேனென்றுசொல்லிக் கும்பிட்டெழுந்திருந்து
தேவர்முனிவரையுஞ் சிறப்பாகவேயனுப்பி
வாய்புதைத்துநின்று மகலைமிகநோக்கி
செப்புகின்றாரீசரும் சித்திரபுத்திரற்கு

விருத்தம்.

அரனுடனேவாழுந்தேவ ரானதோருயிர்கட்கெல்லாம்
பரமனுடன்பாவபுண்ய பத்திரமெழுதவேண்டிக்
கரமிசையுதித்தசித்ர புத்திரகாணிக்காயென்
றருமையாயவனையீசன் வரவழைத்தருள்செய்வானே; ௧

சித்திரபுத்திரரைச் சிவனுமேவரவழைத்து
புத்திரவாவிதன்னிற் பாங்குடன்பூவாய்ச்சென்று
வச்சிரன்வளர்த்தஆவின் வயிற்றினிற்சென்றுபுக்கிப்
புத்திரனாய்ப்பிறக்கப் போவெனவிடைகொடுத்தான். ௨

எழுதி கணக்கையும் இறைவன்மாலவசத்திலாக்கிப்
பழுதில்லாப்பூமிதன்னிற் புகுந்துரைதெரியவப்பால்
வழுவில்லாதொழுதகாமும் வரமுனக்கருளிச்செய்தோம்
எழுமெனப்பூமியாரக் கணக்கையுமருவுக்சேர்ந்தான். ௩.

வசனம்.

அதெப்படியென்றால் முன்கயிலாசபருவதத்திலேயும் வைகுண்டத்திலேயும் பிரமலோகந்திறுமுண்டான தேவர்கள் ரிஷிகள்தபோதனர்கள் முதலானவர்கள் செய்கின்ற பாவபுண்ணிய கணக்குங் கருவும்பார்த்து சிருட்டிசெய்த சித்திரபுத்திரரை ஈஸ்வரர்வரவழைக்குத் தேவேந்திரன் மகாகொடுரமாய் அந்தரமாந்தவசு செய்கிறதைப் பாருமென்றுசொல்ல அப்போ சித்திரபுத்திரர் அவருக்குச் சந்தானமில்லையே அவர் எப்படித்தவசுசெய்காலு மில்லையென்று சொல்ல அப்போது சிவன் எந்தவிதமாகிலும் நீயேபோய்ப்பிறந்து புத்திரவாஞ்சையைத் தீர்க்கவேணுமென்றுசொல்ல இந்திரன் வயிற்றிற்பிறக்க காரணமில்லை என்று சித்திரபுத்திரர்சொல்ல இந்திராணிக்கு காமனுப்பிய காமதேனுவாகிய பசுவின்வயிற்றிற் செனித்தால் குற்றமில்லை அதற்குச் சம்புமகாப்பொய்கையாகிய தடாகத்திற் றாமரைபுஷ்பமாய் அவதரித்தால் அப்பொழுது அந்தப்பசுவானது தண்ணீர்குடிக்க வருந் தண்ணீருடனேபோய் செனித்துபிறப்பாய் உடனே மகவாசை தீரும் பூமியிலுண்டாகிய முன்பாவபுண்ணிய கணக்குகளுஞ் சேராகுமென்று கணக்கெடுந்தெழுதிக்கொடுத்து எழுத்தாணியுங்கொடுத்து அவடத்திலுண்டான கணக்குங்கருவேலமும் மகாவிஷ்ணுவசம் ஒப்புவிக்கசொல்லி யுத்தரவளித்தபடி ஒப்புவித்துப் பின்புசித்திரபுத்திரர்அவ்விடத்திலுள்ள பெரியோர்களெல்லாம் அழைத்துக்கொண்டு சம்புமகாப்பொய்கையில்வந்து அவதரிக்கிறகதை இனிச்சொல்லுகிறோம்-எ-று.

(நடை) ஈஸ்வரருமீஸ்வரியு மின்பத்துடன்மகிழ்ந்து
எந்தெந்தபுத்தகத்தை யெடுப்பேனென்கோவே
ஆயிரம்பேராலும் அசைக்கவொண்ணுபுத்தகமே
ஞானநெறிநீதிமறை நன்னூலின்நீடுபுகழ்
பூண்டவர்கள்புத்தகத்தை போயெடுத்துவாருமென
போயெடுத்திவந்து பொற்பலகைதன்னில்வைத்தார்
பொன்னினெழுத்தாணியுடன் புத்தகமுங்கைகொடுத்தார்
முற்கணக்கும்பிற்கணக்கும் முன்னேட்டனுபடியும்
எக்கணக்கும்பார்த்து எழுதுமென்றார்புத்திரரை
யெழுதியந்தாள்வரையில் எடுத்துக்கொடுத்தனர்காண்
ஏழுலோககணக்கு மெழுதிமிகக்கொடுத்து
பாவிகணக்கும் பஞ்சபாதர்தாங்கணக்கும்
நாகலோகத்திலுள்ள நன்மையுள்ளதன்கணக்கும்
பூமிதனில்மாயவனர் புண்ணியபாவக்கணக்கும்
அல்லார்கணக்கும் எழுதிமிகக்கொடுத்து

ஆதிபரமசிவன் அண்டரண்டந்தான்வகுத்து
மூத்தகணபதியும் முருகருவலமிருக்க
இளையகுமாரன் இடதுபக்கத்தி லிருக்க
தேவாதிகளெல்லாஞ் சேரவேதானிருக்க
இருடிமுனிவோர்கள் எல்லாருந்தானிருக்க
சாதிபதினெட்டுந் தப்பாமல்தான்வகுத்து
எமதர்மராஜன் இயல்காலதூதருடன்
பல்லாயிரங்கோடி பகிரண்டந்தான்வகுத்துப்
புண்ணியபாவம் புதுமையாய்த்தான்வகுத்து
இந்தவரைக்கணக்கை இயல்பாகத்தானெழுதும்
வச்சிராகாரமாய் வரைந்துணைக்கெழுதும்
பத்திரமாயதிகாரம் பலகாலும்உங்களுக்கே
தப்பாமலுங்களுக்குத் தந்தோமெனவுரைப்பார்
சந்திரசூரியர்கள் தங்களொளிபோலவே
குண்டலமுங்காதிலிட்டுக் கூந்தல்முடிசூட்டி
ஆபரணமெல்லாம் அழகழகாய்த்தான்பூட்டி
சிவனிடத்தில் தீர்க்கவிடைவாங்கி
அம்மையுமையாளிடத்தில் அன்பாய்விடைவாங்கி
எண்ணாயிரம்பூதம் எடுக்கவென்றுபட்டோலை
கட்டிச்சமைத்துக் கொடுத்தார்களந்நேரம்
கட்டிச்சுருட்டிக் கக்கத்திற்றானிடுக்கித்
தாங்குவாயென்று தாமேவரங்கொடுத்தார்
தாமரைப்பூவாகத் தரித்தாருத்தமரை
சித்திரைக்குச்சித்திரையிற் சிறந்தபவுரணையில்
அந்தத்தலைக்கிழமை யாதித்தவாரமதில்
சித்திரபுத்திரனைச் சென்றங்கவதரிப்பாய்
புத்தகமும்முந்நூலுங் கூடப்பிறக்குமென்றார்
சிவனாருள்படிக்குச் சிறக்கவிடைவாங்கி
ஐராவதங்களென்னும் ஆனைகளைதான்பூட்டும்
ஆகாசத்தேரும் அப்போதுதான்கொடுத்தார்
வாராரேயுத்தமனார் வாவிகளைநோக்கி
சென்பகங்களாடுமந்தச் சிறந்தவொருபொய்கையிலே
ஆணிப்பவளம் அடுக்கடுக்காய்த்தான்விளையும்
வயிரவயிடூரியமும் வச்சிரகோமேதகமும்
புஷ்பராகங்களும் புகழுமந்தப்பொய்கைதனில்
முத்துக்கள்வந்து முழங்குமந்தவாவிதனில்
சங்குகள்சூலங்கொண்டு தவழுமந்தப்பொய்கையிலே
கெருடனுமங்கே கிளைகூடிக்கொண்டாடும்
மயிலினங்களெல்லாம் மகிழ்ந்துவிளையாடும்
அன்னங்கள்தாராக்கள் அமர்ந்தாடும்பொய்கையிலே
வானரங்கள்பாடி மகிழ்ந்துவிளையாடும்

மாடப்புறாக்களெல்லாம் வரிசையாய்த்தானிருக்கும்
புனுகுடன்பிள்ளை பொருந்திமிகவாழும்
சவ்வாதுடன்பிள்ளை தான்மிகவும்வாழும்
கஸ்தூரிபிள்ளை கவியுமந்தப்பொய்கைதனில்
கவரிமான்வந்து கலந்துவிளையாடும்
காண்டாமிருகம் குதித்தாடும்வாவிதனில்
புட்பாதிகளெல்லாம் பொலியுமந்தஸ்ரீராவில்
கனிவகைகளெல்லாங் காய்க்குமந்தபொய்கையிலே
செங்நெல்விளைந்து சிறந்திருக்கும்ஸ்ரீராவி
மல்லிகைமுல்லை வாய்த்தசிறுமிச்சிகளும்
இருவாட்சிபிச்சி இருந்துமிகவீசும்
மருவும்மருக்கொழுந்து மணம்வீசும்பொய்கைதனில்
ஏலங்கிராம்பும் இலங்குமந்தஸ்ரீராவி
சாதிக்காய்பத்திரியும் தான்விளங்கும்பொய்கையிலே
மாங்களிற்றேனருவி வந்துமிகப்பாயும்
வண்டுகள்தாம்பிரமுதல் மதுவுண்ணும்பொய்கைதன்னில்
மந்திகள்பாய்ந்து மதுவுண்ணும்பொய்கைதன்னில்
செந்தாமரைபூத்துச் சிறப்பிக்கும்வாவிதன்னில்
அல்லிமலரும் அப்படியேதான்பூக்கும்
சந்திரர்கள்சூரியர்கள் தானுதிக்கும்பொய்கைதனில்
ஆதிப்பிரமாவும் அமர்ந்தாடும்ஸ்ரீராவி
நாராயணர்முதலாய் நல்லரிஷிகளுமே
முனிவர்முதலாக நல்லரிஷிகளுமே
முனிவர்முதலானோர் முழுகுமந்தபொய்கையிலே
கன்னியர்களெல்லாங் கலந்துவிளையாடிடுவார்
பழயவினைகளெல்லாங் கலந்துவிளையாடிடுவார்
தீவினைகளெல்லாந் திடுக்கிட்டுத்தானோடும்
பிணிகள்முதலாகப் பிறக்கிட்டுத்தானோடும்
கிழவர்முழுகினால் பாலகராகப்பிறப்பார்
இந்தவிதமா யிருக்குமந்தப்பொய்கையிலே
சித்திரபுத்திரருஞ் சீராகவந்துதித்தார்
தாமரைப்பூவாகத் தான்வந்தவதரித்தார்
இனிமேல்நடக்கும் இக்கதைன க்கேளுமென்றார்
ஏலங்கருங்குழலாள் இந்திராணிதன்மனக்கு
சித்திரதேவி நிறையபிமதான்பிடித்து
பஞ்சணைமெத்தையினில் சயனித்தாள்பைங்கொடியும்
அப்போதுசொப்பனங்கள் அழகாக்கண்டனளே
கண்டுமகிழ்ந்து கடுகிட்டெழுந்திருந்து
தாதியரைதானழைத்து தானும்மெடுத்துரைப்பாள்
இந்திரனைப்போலே யென்தன்மடிமீதிலே
சந்திரர்கள்சூரியர்கள் தங்கள்ஒளிபோலச்

செம்பொனெழுத்தாணியுடன் சேர்ந்தமர்ந்தபிள்ளைபோல
பச்சடம்புநல்ல பால்சரக்கக்கண்டேன்
காயாதவாழை காய்க்கவுங்கண்டேனே
இன்பம்பெருகி யிருந்தோனும்பூரித்தேன்
கோட்டைபலாமரமுன் கொழுந்துவிடக்கண்டேனே
பதினாலுலோகமுதல் பண்பாய்க்கணக்கெழுத
கண்டகனைவுங் கைமேற்பலிக்கவென்று
சிந்தித்துநின்று சிவன்பாதமேதொழுது
வேழமுகத்து விநாயகனைத்தெண்டனிட்டு
மயிலேறும்பெருமானை மனமகிழ்ந்துகொண்டாடி
மூவரையுமங்கே முழுதுமேதெண்டனிட்டாள்
சூரியபகவானைத் தோத்திரங்கள்செய்யலுற்றார்
கண்டகனுப்படியே காசினியிற்கொண்டாடி.
குண்டலங்கள்மின்னக் குமாரன்வந்துதோன்றுவதால்
பொற்கனகமாரி பொழிந்திடவெல்லோரும்
என்றாளுர்பாதம் எந்திப்பதிந்துநின்று
இந்திராணிதான்வளர்த்த இளம்பசுவையந்நேரம
அம்புகரித்துவிட்டார் சூரியனுமப்போது
கட்டவிழ்த்துக்கொண்டு கடுகப்புறப்படவே
இந்திராணியம்மை யிளங்கோதையோடிவந்து
முத்திமுகந்து முகத்தைமிகத்தடவி
நான்மலடியென்று நாடெல்லாந்தானறியும்
என்னோடேகூடே நீயுமலடாகாமல்
இனத்துடனேகூடி யின்பமுறமேய்ந்திடுவாய்
வனங்கள்தனிலே வளர்மிருகமெத்தவுண்டு
இனத்தாரைவிட்டு இனம்பிரிந்துமேயாமல்
எல்லைகடவாமல் இளம்பயிரைத்தின்னாமல்
சுனசாலி யிளஞ்சாலிதின்னாமல்
குலையோடேயாமணக்கை கொழுந்தோடருந்தாதே
சோளக்கதிரைக்கண்டாற் சுற்றியேமேயாமல்
ஏனக்கடுகுநாய்க்கடுகு எதிட்டுப்பாராமல்
கள்ளிகளைத்தின்னாமல் கரண்டபுல்லுமேயாமல்
இத்தனையும்நீக்கி யிதமாகத்தான்மேய்ந்து
மாலைகருகருத்து மையிருளாகுமுன்னே
எல்லைக்குவந்துவிடு என்மகளேயென்றுசொல்லி
இந்தப்படியே யிசைந்தபுத்திரஞ்சொல்லி
மேய்ந்துவாவென்று விட்டாளேயப்பசுவை
மேய்ந்துதருவதற்கு மெய்குளிர்ந்தேயப்பசுவும்
சிலம்புகலகலெ ச் செஞ்சலங்கையோசையிட
ஆபரணத்தோடே பசைந்தேயினையாடி
அடிமேலடிவைத்து அன்னம்போல்தானடந்து

காட்டோடேசென்று கடுகவேதான்மேய்ந்து
பொற்புல்லுந்தின்று புனப்புல்லுந்தானருந்தி
தண்ணீர்தாகத்தை தான்பொறுக்கமாட்டாமல்
கண்ணாயிரமுடைய காவலனார்சோலையிலே
இந்தப்படியே யிருக்கிறநேரமதில்
சிவனாருமங்கே சித்தமகிழ்ந்தந்நேரம்
அலைகடலின்மேலுதிக்கும் ஆதித்தபகவானை
விரையவேதானழைத்து விடைதந்தாரென்னவெனில்
தேசமதையாளுந் தேவேந்திரன்தேவி.
பிள்ளையாய்த்தான்வளர்த்த பெரியதொருபசுவும்
சம்புத்தலத்திற் றானிருக்குஞ்சோலையிலே
திக்குதிசைகள் தெரியாமல்நிற்குதுகாண்
வழித்தடங்கட்டி வரும்போதுவாசியிலே
தண்ணீர்க்குடிக்குந் தருவாயில்தோறும்.
செந்தாமரைப்பூவைச் சிறப்பாகமுன்னிடுவாய்
என்றரனார்சொல்ல எற்றபகவானும்
திகைத்தபசுவுக்கு தெரியவழிகாட்டிடவே
வழியின்படியே வந்ததுவேநற்பசுவும்
சம்புமகாப்பொய்கை தன்னருகேவந்துநின்று
பொய்கைதனைக்கண்டு பூரித்து ஆகமெல்லாம்
சுற்றிவலம்வந்து தூய்யதிருநற்பசுவுந்
தங்கப்படித்துறையைத் தான்கண்டேயங்குள்ள
புதுமைகளெல்லாம்பார்த்து பூரித்திருந்தோளும்
ஆவலுடன்தண்ணீர் அருந்துமந்தவேளையிலே
தப்பாமல்சூரியனு தாமரைப்பூப்பறித்து
போடவேதான்தின்று பொறிகலங்கிச்சூலாகி
வால்விசிக்கரையேறி மயங்கியேசூல கி
முட்டுகளுந்தானசைந்து முகமுமிகக்குழைந்து
வாயில்நுரைதிரண்டு மயிர்க்குச்சுதான்தெரிந்து
முட்டிமுனங்கி முன்வயிறுதான்தள்ளி
நாலுதிக்கும்பார்த்து நடுங்கிவழிநடந்து
காதுமடைத்துக் கண்ணுமிருளாகிச்
சிவனாரையங்கே தோத்திரங்கள்செய்துமெள்ள
எல்லைதனில்வரவும் எங்குமிகத்தளர்ந்து
செட்டியார்கள்வீதியிலே சென்றுமேகால்மடித்துப்
படுத்ததேயப்போ பலபேருமோடிவந்து
நாடாளுமிந்திரற்கும் நாகமடந்தையர்க்கும்
தேடாததிரவியமே சிறந்தமகாதேவியம்மா
மயிலேநீபோமிடத்தில் மல்லநாகந்தீண்டியதோ
மாயமிருகம் வளைந்துமொட்டினதோ
நச்சுப்புல்லுத்தின்றதுவோ நாகங்கடித்ததுண்டோ

என்றுபுலம்பி எல்லோருமோடிவந்து
விஷத்துக்குப்பார்த்து யேல்தடவிநிறுவிட்டு
செட்டிச்சிகளெல்லோரும் சிறக்கவேயோடிவந்து
சந்தனக்குங்குமந் தானுமிகக்கொண்டுவந்து
ஆவின்மேலெல்லாம் அடைவாகத்தான்பூச
அப்போவொருதாதி யானதொருவார்த்தைசொல்வாள்
பசுவின்வடிவல்லப் பாலன்வடிவென்றுசொல்லிக்
கழுநீரும்புல்லுங் கலந்துகுடிக்கவைத்துச்
சந்தனமும்பன்னீருந் தானுமிகப்பூசி
ஆலவட்டங்கொண்டு அருகிருந்துதான்வீச
சுற்றித்திரைகட்டி சூழவேகாத்திருக்க
தாகந்தெளிந்து தானேவிழித்துப்பார்த்தவுடன்
பசுவின்வயிற்றில் இருக்குமந்தப்பாலகனுஞ்
சிறப்பாய்பிறந்திருக்க வேறுவென்றார்செட்டிச்சிகள்
என்றபொழுதே யெழுந்துதேநற்பசுவும்
செம்பொன்மணிமண்டபத்திற் சேரவேவேணுமென்று
ஆசாரமேறி அசையாமணியடித்துத்
தங்கமணித்தூணோடே சாய்ந்ததுகாண் அந்நேரம்
இந்திரனார்தேவி யிளங்கோதைதான்கேட்டு
அசையாமணியை யசைத்தவந்தகாரியமேன்
இந்திரரும்போனார் தவத்துக்கேயென்றுசொல்லி
எந்தவிதமோ தெரியவுமாட்டுதில்லை
பாருங்களென்றுசில தாதியரைவிட்டாள்காண்
போனார்கள்தாதியர்கள் பொற்கொடியாள்சொற்கேட்டு
வந்துமேபார்த்து மறுபடிதான்சொல்லலுற்றார்
நாகமடந்தையரே நல்லதொருதேவியரே
வளர்த்தபசுவந்து மயங்கிக்கிடக்குதென
எண்ணத்தொலையாத எற்றபசுக்களுண்டு
எந்தப்பசுவென்றுகண்டீர் எந்திழையீர்சொல்லுமென
கண்கள்பவளமுமாய் கண்டவர்க்குநல்லூரவாய்
நெற்றியிலேவெள்ளையுமாய் நிறமெல்லாம்பொன்னிறமாய்
என்றமொழிகேட்டு எங்கேயேயோடிவந்து
சிங்காசனத்தைவிட்டுத் திரும்பியேயோடிவந்து
காருவினண்டையிலே கதறியேயோடிவந்து
தேனேமரகதமே தியக்கம்வந்தகாரியமேன்
மானேமரகதமே மயங்கிடுவதென்னவென்று
துயரத்துடனே சொல்லுவாளிந்திராணி

வி-ம். அந்நினன்னடைந்ததுண்டோ யாதுரைதவித்ததுண்டோ
சிந்தையாய்ப்பெரியோர்முன்னால் நெடுமுறைதவறினேமோ
கந்தன்மாலயன்வேறென்று கருத்தினில்நினைத்ததுண்டோ
உந்தன்முன்னோர்கள்செய்த இகழ்வினைமுடிந்தவாறோ.

நடை.

மானேயுனக்கு வஞ்சனைகள்செய்ததுண்டோ
கொள்ளிக்கண்ணியான கொடும்பாவிபார்த்தாளோ
மலைமீதிலேறி மப்புல்லுத்தின்கையில்
விஷங்கள்கடித்ததுண்டோ வின்றுனாயெந்தனிடம்
எந்தன்றிருமேனி யுள்ளடைந்தவாடுவதேன்
இந்தவிதிவருமோ அறியேனேயென்றுசொல்லி
குங்குமச்சந்தனமுங் கூட்டிக்குழம்புசெய்து
செங்கையால்வாரித் திமிர்ந்தாளேயுத்தமியாள்
அப்போதுகூடத் திரவில்லையம்மயக்கம்
காடிக்கழுநீருங் கஞ்சியுந்தானகலந்து
விட்டபொழுதே குடித்ததுவேயற்பசுவும்
பாரக்கனைதீர்ந்து பார்த்துமேயந்நேரம்
கண்கள்பொரிபறக்குங் காலசந்துவால்சுற்றும்
மானகதைப்பார்த்து மனதையருவருக்கும்
பூமியைப்பார்த்தப் பொறிகலங்கிச்சிதிறிற்கும்
ஆனந்தமாகி யதிரநடனமிடும்
சிவசிவாவென்று திகைத்துநெடுமூச்செறியும்
அரகராவென்று அலறுமதைத்தான்கண்டு
தேவியுமங்கே திகைத்துமொழிசொல்லுவாள்காண்
பசுவுக்குவந்தநோய் பார்த்தறிந்துசொல்வோரைக்
கூட்டிவாவென்றாள் கோதைமயிலாளும்
ஆயர்இடையர்தம்மை யழைத்தோடிவந்தார்கள்
வந்தவர்களப்பசுவை மதியோடேதான்பார்த்து
சொல்லுவாரந்த தோகைமயிலாட்கு
ஆரமுலைப்பசுவு மடங்கியிசுக்குலாச்சு
இன்றுநாளையிறு மீற்றுமயக்கமிது
என்றுதான்சொல்லி யேகினரப்போது
பசுவின்மயக்கத்தைப் பார்க்கமுடியாமல்
கோவிற்கால்தன்னிற் கொண்டுவாவென்றுரைத்தாள்
நாதியர்கள்கூடித் தானெடுத்தாரப்போது
கொண்டுவந்துவிட்டார்கள் கோவின்கால்முன்பாக
சூழநிறைந்து தூபமிடம்பண்ணுவித்து
வாய்த்தபரிகாரி வரவழையுமென்றுரைத்தாள்
பரிகாரிகள்வந்து பணிந்துமேதெண்டனிட்டார்
கோவைப்பிழைக்கவைத்தால் கோடிதனங்கொடுப்பேன்
என்றமொழிகேட்டு யேற்றபரிகாரிகளும்
காட்டுமருந்தும் கடுமருந்துமொருகோடி
சிவனைநினைத்து தோத்திரங்கள்செய்கிறாள்
அபயமபயமென்றாள் அல்லலொழிப்பாயென்றாள்

செங்கைசிவப்பத் திருவயிற்றிலேயமறைந்தாள்
அய்யோசிவாவென்று அடித்துவிழுந்தழுதாள்
அப்போசிவனும் அங்குள்ளதேவர்களும்
கயிலாசமிருந்து கண்டார்களந்நேரம்
வானுலகந்தன்னை வழிதிறந்துபார்க்கலுற்றார்
வைகுண்டலோகம் வழிதிறந்துபார்த்தார்கள்
அபிபாயமோவென்று அலறியழுதகுரல்
மகாதேவர்தானும் மனதாரக்கேட்டதன்பின்
சிவபெருமானங்கே திருவாய்மலர்ந்தருளி
சிவபெருமானீஸ்வரியைத் திரும்பிமுகநோக்கி
போய்நீயுமையே புகழ்ந்துகுறிசொல்லென்றார்
பத்தினியாய்ச்சென்று பகுத்துரைப்பாயென்றருள
அந்தயுமையவளும் அரனாரருட்படியே
கொக்கிறகுசூடிக் குறமாதுதன்னைப்போல்
பொற்கூடைபொற்பிரப்பு பொற்குறிக்கைதானெடுத்து
பாடிநடந்துவந்தாள் பார்வதியாள்நற்குறத்தி
பாடியிருந்து பரமனிருதாள்பணிந்து
இருந்தவளைப்பார்த்து இறைவனார்சொல்லுகிறார்
குன்றமலைச்சி கொடிச்சிகொடியிடைச்சி
வள்ளிக்குறமாமி மலையரசன்மகளே
என்றனதுகைபார்த்து எற்றகுறிசொல்லுமென்றார்
குறிகளுமப்போது குறமாதுசொல்லுகிறாள்
மண்ணுஞ்சுமந்ததுண்டு மரத்தாலடியுமுண்டு
சிறுத்தொண்டர்பிள்ளைகறி உண்ணப்போனதுண்டு
மண்டோதரியுடனே வாளரக்கன்மாளிகையில்
கூடியேவந்து குழந்தையாய்ப்போனதுண்டு
அருசில்சோழன் அருமைமகளையன்று
தேரூர்ந்துகொன்றெழுப்பச் செய்ததுந்தானுண்டு
பின்னையொருமைந்தன பெருவயிரன்தானுமவன்
அன்னைபிதாவுக்கு முன்னேயவன்பிறந்தான்
இப்படியுநல்லகுறி இசைவாகத்தோணுதென்றாள்
அப்போதுசிவனு மருளுவார்உத்தமிக்கு
கொச்சைக்குறத்தி குறிப்பார்க்குஞ்சிற்றிடைச்சி
கழுவிலிருந்தகை காட்டினர்தங்கையரே
உழுதுதிரிந்தபன்றி யுங்களண்ணன்தானல்லவோ
ஆய்ச்சியர்கள்வீட்டில் அடியுண்டுகெட்டுண்டு
வெண்ணெய்திருடியுண்ட வெறியன்றங்கையல்லவோ
புன்னைமரத்திற் போயொளித்தார்தங்கையல்லவோ
என்றேயிருபேரும் ஏற்றபடிகொண்டாடி
சந்தோஷமாகித் தாமேவிடைகொடுத்தார்
திருவாபரணமெல்லாம் பூட்டிச்சிவனாரும்

போய்வாறேனென்று புனிதர்விடைபெற்று
மாதாவுமன்னேரம் வானுலகுவிட்டிறங்கி
தேவேந்திரலோகஞ் சென்றாள்குறமாது
மைவாழ்குறத்தி வானவர்தன்கோவில்வந்தாள்
இந்திராணியம்மை யெங்கிருக்கிறாளென்றாள்
இந்திராணிகண்டு யெழுந்துபோயோடிவந்து
வாராய்குறமாதெனவே வந்தேனெனவுரைத்தாள்
பாராய்குறத்தியம்மா பசவைப்பிழைப்பித்தால்
வேண்டியதெல்லாந்தருவேன் விருந்தமாய்க்கொடுப்பேனென்னச்
சொன்னவுடனே சொல்லுவாள்குறமாது
குறமாதுதானுங் குறிசொல்லவிந்திராணி
ஆசனங்கள்போட்டு அடிபணிந்துகேட்கலுற்றார்
குறமாதுதானுங் குஞ்சிரிப்புகொண்டருளி
விநாயகபூசை செய்ய வேணுமென்றுதான்சொல்லி
வேண்டியதெல்லாம் வேணபடித்தான்குவித்து
விநாயகனைத்தானினைந்தாள் வெள்ளிமலைகுறத்தி
கணபதியுமங்குவர கனமாய்படைத்ததனை
உருட்டித்திரட்டியொரு உண்டையாய்த்தான்பிடித்து
கவளங்கொடுக்க கணபதியும்வாங்கியுண்டார்
சிங்கியடித்துச் சிரித்தாள்குறமாது
கேளாயோயென்குறியும் கேவலமென்றெண்ணாதே
எந்தன்குறிதானும் எள்ளளவுந்தப்பாது
செங்கைவடிவேலவனென் சிறுமைந்தன்கண்டாயே
மூத்தமகனுமந்த மூர்த்திவிநாயகன்காண்
கந்தமருமகள்வள்ளி தானுமவள்மாமி
ஆரூர்சடையீசர் அவருடையபத்தினியாள்
பரமேஸ்வருடைய பார்வதியும்நான்தாண்டி
நின்னுடையசிந்தையிலே நினைத்தபடிசொல்லுகிறேன்
வானுலகமாளா மகன்வருவானுன்றனுக்கு
அன்புடனேகேளாய் ஆனகுறிதானும்
இம்மையிலும்மறுமையிலு மென்குறிகள்தப்பாது
ரத்னமுடிசூடி நல்லமைந்தனும்வருவாய்
பெற்றிடுவீர்இப்போது பெருமாள்திருவருளால்
கண்ணிறைந்தபாலகனார் கணக்கெழுததோன்றுகிறார்
நீலகண்டர்தம்மருளால் நினைத்தபடிகிடைக்கும்
வளர்த்தபசுவயிற்றில் மைந்தர்வந்துதோன்றுகிறார்
கோவின்வயிற்றிற் குமாரன்வந்துதோன்றுகிறார்
சித்திரைக்குச்சித்திரையிற் சிறந்தபவுரணையில்
அத்தன்தலைக்கிழமை யாதித்தவாரமதிற்
புத்தகமுந்தானும் பொருந்தியபொற்குண்டலமும்
ஆயிரம்பெங்கிலியர் அசைக்கவொண்ணாப்புத்தகமும்

எழுத்தாணிக்கைபிடித்துப் பிறப்பாண்டியென்மகனே
உத்தளமாய்வெங்நேரும் ஒளிருந்திருவமுதாய்ச்
சித்திரபுத்திரர்வந்து செனிக்கிறார்மாமயிலே
பூலோகஆளப் பிறக்கிறார்பொற்கொடியே
எறாய்ப்புகடையானை தலையெல்லாமெழுதவல்லார்
புத்தகமுந்தன்னிற் புகழ்ந்தெழுதும்புண்ணியனார்
அருளுஞ்சிவனுக்கும் ஆனைமகாவிஷ்ணுவுக்கும்
வருக்கும்பிரமாவுக்கும் வாழ்விக்கும்லட்சுமிக்கும்
கணக்கராய்த்தானிருந்து காரியமெல்லாம்பார்ப்பார்
இப்படியாக இருப்பான்காண்ஏந்திழையே
அரனார்கருவேலம் அவர்கையிலிருக்குதுகாண்
இந்திராணிமாதே யிக்குறிபொய்யாதெனவே
இன்பத்தோடுங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
குப்பல்குப்பலாகப் பொன்குவித்தாளேந்திழையாள்
அன்னோர்தான்குறத்தி யவள்முகம்பார்த்துரைப்பாள்
உன்னுடையஅன்பு இருந்தாலும்போதுமினி
பொன்னும்பணமும் புலவன்படைக்கிலேயோ
நிறைநாழிமுகத்தை நேரேகொடுமென்றார்
மங்கையரேபோய்வாரேன் மகாதுவாமுந்தீர்ந்து
மகனுடனேநீயு மகிழ்ந்துமேவாழ்ந்திருப்பாய்

விருத்தம்.

உமையவள்குறிகள்சொல்லி யுரைப்படிமுடியுமென்று
சமையநல்லிந்திராணித் தானுமேமனதைதேற்றி
அமையவேவரத்தையிக்க அடைவுடனான்பாற்சென்று
உமையவள்நடந்ததெல்லா முரைத்தவனிடத்தாற்றுளே

நடை.

அப்பால்நடக்கு மதிசயத்தைக்கேளுமென்றார்
நாகமடைந்தையரும் நல்லகுறியென் றுசொல்லி
பசுவின்வயிற்றிற் பாலன்பிறப்பதுதான்
நிச்சயமாயெண்ணி நினைவுகளைவிட்டுவிட்டு
கொலுச்செய்யுமண்டபத்திற் கோதையும்வீற்றிருந்து
வானம்புவலோக மண்பூமியுள்ளதெல்லாம்
சிறப்பிக்கவேணுமென்று சீரானவள்ளுவனை
யழையுமென்றபோதே யழைத்துக்கேவிட்டார்கள்
பசுவயிற்றிலிப்போது பாலன்பிறக்குதென்று
ஏழுலோகத்திலுள்ளோ ரெல்லோருந்தாமறிய
பறைசாற்றுமென்று பைங்கொடியாள்சொன்னவுடன்
வள்ளுவனுமப்போது வாகாய்ப்பறையறைந்தான்
தெருவீதிகளெல்லாஞ் சிறக்கவேபந்தலிட்டார்
முத்தாவணிந்து முகப்பந்தலிட்டார்கள்

வயிரக்கால்நாட்டி வகைவகையாய்த்தானிறுத்தி
தங்கத்தாலேரடுசெய்து சதிர்ப்பந்தல்போட்டார்கள்
பவளத்தால்காலும் பண்பாகத்தானிறுத்தி
விதவிதமாய்ப்பந்தல் வேடிக்கையாய்செய்து
இந்திரன்சற்சபைக்கு எதிரானதென்புறத்தில்
அன்பதுகாதம்பரப்பில் அகலமுள்ளபந்தலொன்று
தங்கத்தால்கால்கள் சதிராகத்தானிறுத்தி
வெள்ளியினாற்கால்கள் விதவிதமாய்த்தானிருத்தி
நவரத்னத்தாலே நன்றாகத்தானழுத்தி
சித்திரவிஸ்தாரமாய்ச் செய்யவேயவ்வாறுமென்றான்
பத்திபத்தியாகப் பண்பாகசெய்தார்காண்
தேவாதிதேவரெல்லாஞ் சிறக்கவேவந்திருக்க
தபோதனர்களெல்லோருந் தானுமேவந்திருக்க
முனிவர்களெல்லோரு முக்கியமாய்த்தானிருந்து
அந்தணர்களெல்லோரும் அப்படியேதானிருக்க
சங்கீதமேளமுதற் றப்பாமல்வந்திருக்க
பட்டணத்திலுள்ள பரிசனங்கள்தானிருக்க
வகைவகையாய்ப்பத்தி வகுக்கவேணுமென்றான்
பத்திபத்தியாகப் பண்பாகச்செய்யுமென்றான
அந்தப்படியே யடைவாகச்செய்யலுற்றான்
பிள்ளைபிறந்தப் பெருமுகூர்த்தம்வந்ததென்று
எழுலோகமறிய இடிபோல்முரசடித்து
வாருமென்றபேர்க்கே வள்ளுவனும்பறைசாற்றத்
தேவர்முனிவர் சிறக்கவேவந்தார்கள்
தபோதனர்கள்முதறிவோர் தப்பாமல்வந்தார்கள்
ரிஷிகள்முதலாக எல்லவரும்வந்தார்கள்
அந்தணர்களெல்லாம் அப்படியேவந்தார்கள்
பட்டணத்திலுள்ள பரிசனங்கள்வந்தார்கள்
கூன்குருடுசெவிடூமை கும்பலாய்வந்தார்கள்
அவரவருக்கெல்லா மயிராணியுப் பாது
தானங்கள்வாங்கத் தான்வந்திருந்தார்கள்
வந்தபேர்க்கெல்லாம் வடிவாசனங்கொடுத்து
திருமஞ்சனங்கள் சிறப்பாககொண்டுவந்தார்
மாணிக்கச்சங்கு வலப்புறத்தேநின்றாத
வேதப்பிராமணர்கள் வேதங்கள்தானோத
மங்கையர்கள்வந்து வழ்த்திகுறவையிட
கன்னியர்களெல்லாங் காவலாய்ச்சூழ்ந்துநிற்க
அங்கயறகண்ணம்மை யருகிருந்துகைகொடுக்க
பார்வதியம்மை பண்பாகவந்தார்காண்
பொன்னின்கலமேந்திப் புறப்பட்டார்பூமாது
மன்னர்பெருமான் வருகிறஅதிசயங்கள்

## நயினார் சிறப்பு.

ஆயிரங்கிங்கிலியர் அசைக்கவொண்ணாபுத்தசமும்
பொன்னிலெழுத்தாணியுமே பொற்பாக்கைகைபிடித்து
காதிலிருகுண்டலமும் கனக்கமேதான்பூட்டி
ஆனார்திருவருளால் ஆகின்யமிறவிட்டு
பொன்னின்கலசத்திற் பிறந்தார்புகழ்வீரர்
மின்னொளிபோலே வெளிப்பட்டார்உத்தமனார்
பூமியதிசிறக்கப் போர்வேந்தர்வந்துதித்தார்
பாவப்புண்ணியங்கள் பகிர்ந்தெழுதவந்துதித்தார்
எடும்பிடித்து இடதுகையில்வெண்ணிரும்
காதிலேயிட்ட கனகமணிக்குண்டலனார்
பாரிற்சிறந்தநர் கணக்கரிவரென்பாரும்
எந்தவுலகி லிருந்தவர்களென்பாரும்
பிரமாவோவென்று பெருத்தமொழியுரைத்தார்
இப்படியுஞ்சிலபேர் ஏற்றமொழியுரைத்தார்
திருவுறுவைச்சொல்லத் தேவாற்கூடாது
எல்லார்கணக்கு மெழுதவென்றுதான்பிறந்தார்
நமனிவாயவென்றெ நல்லமைச்சித்தருடன்
நமனுக்கதிகாரி நானென்றசத்தமதாய்
சித்திரபுத்திரருந் சிறப்பாகவந்துதித்தார்
தெய்வலோகப்பெண்கள் சிறக்கக்குறவையிட்டார்
பெண்களெல்லாங்கூடிப் பெருங்குரவையிட்டார்கள்
கன்னியர்களெல்லாங் கனக்குரவையிட்டார்
பதினெட்டுவாத்தியமும் பாரெங்குந்தான்முழங்க
பூமாரிபெய்கும் பொழிந்தார்கள்தேவரெல்லாம்
தேவர்அமிர்தந் திருச்சங்கில்தாமேந்தி
சேலையுமங்கே சிவதுமையாள்தான்கொடுத்தாள்
இந்திராணிதானும் இளங்கோதையந்நேரம்
திருவாய்விளக்கித் தீர்த்தமுந்தானுடி
பட்டையுடுத்திப் பகவானைத்தெண்டனிட்டு
பின்னலைவாரி முகத்தேநெட்டெழுத்தமிட்டாள்
அப்போதுபச்சடம்பாரச்சுதவம்மேனியெல்லாம்
பாதமுமிரண்டிற் சாந்தநாண்மைப்பக்கொடிக்கு
தான்பெற்றதுபோலே தான்கையிற்போனாள்காண்
அப்போயொருசாதி பதினெழுமூர்திருந்து
காயக்கடைசார்க்குக் கனமாகவுள்ளதெல்லாம்
கூட்டியேதானுங் கொடுத்தாரேசோதையற்கு
அப்போதவ்வையாரும் அங்கேதானோடிவந்து
மைத்தனைக்கைவாரெடுத்து மடிமீதில்வைத்திருந்து
வாகலாகருவி வாயற்செவிமூக்கெடுத்து
சேரனையெடுத்துச் சுரிகுழலாள்கைமாற்றி

தொப்புளறுத்து குலவைமிகமுழக்கி
சரத்துவட்டி யிளையாடசாம்பிட்டு
பஞ்சாடைக்குள்ளே பலகலைதானமர்த்தி
வேண்டுமுபசாரம் விதம்விதமாய்செய்தபின்பு
தேவேந்திரன்வரவை காணுமெனத்தினைத்து
இந்திராணிதான்புலம்பி ஏங்கலுற்றாளந்நேரம்
பாலகனைப்பார்ப்பதற்கென் பதாவைக்காணேனென்று
அப்போசிவனு மங்குள்ளதேவர்களும்
வந்தவுடனே மகனைத்தான்வாங்கி
தாங்கியெடுத்துத் தழுவிமுத்தந்தானுமிட்டு
கண்டான்மகன்முகத்தைக் கண்ணுறுபதாலே
உண்டானசந்தோஷ முரைக்கமுடியாது
அந்நேரமிந்திரனும் அழகனைநாரியபிர
சுந்தரியாளிடத்திற் கொண்டுபோமென்றுசொன்னார்
ஆவலுடன்வந்து அரியமகனுக்கு
தெய்வப்பிராமணரைத் திரும்பியழைத்தார்கள்
பிறந்தவிபரம் பிசகாமற்கேட்டவுடன்
இந்தப்படியா யிருக்குமந்தவேளையிலே
நவக்கிரகமெல்லா நயமானநாளொன்றில்
பேரிடவேணுமென்று பெரியதொருஇந்திரனும்
சித்திரையில்வந்ததினாற் சித்திரபுத்திரனென்றார்
அப்படியேபேரை யழைத்தார்களந்நேரம்
சிரிட்டபாற்பசுக்கள் சிறப்பாய்க்கொடுத்தனர்காண்
தானதருமங்கள் தான்கொடுத்தாரந்நேரம்
மகனையன்றுபெற்றெடுத்த மாய்த்தொருபசுவும்
மகனுக்குபாலமுர்தம் வாஞ்சையாய்தான்கொடுத்து
நிற்குமனையில் நினைவுமறந்தொருநாள்
பாலகன்நெஞ்சிற் பசுக்குளம்புபட்டவுடன்
இந்திராணிகண்டு ஏங்கிமிகப்பயந்து
மகனையெடுத்து மார்போடேதானணைத்து
இந்திராணிதானும் இளம்பசுவையந்நேரம்
கரத்தாலடித்தவுடன் கண்சிவந்துதான்பசுவும்
திடமுடையபால்பசுவுந் தெய்வமேசாட்சியென்றார்
சரணஞ்சரணமையா தற்காத்துக்கொள்ளென்று
சிவனைநினைந்து தோத்திரங்கள்செய்ததுவே
அப்போசிவனும் அங்குமுள்ளதேவர்களும்
பசுவையடித்த பாவத்தைத்தான்தெரிந்து
இந்திரவிமானத்தை யெடுத்துக்கொண்டோடிப்போய்
இந்தட்சணம்பசுவை இங்கேயழையுமென்றார்
தேவர்கொண்டுவந்தார்கள் தேன்மொழியாள்வாசலிலே
வந்தவுடன்அப்பசுவு மகதேவனைப்போற்றி

தேரின்மேலேறிச் சிவனாரிடஞ்சேர்ந்து
இந்திரர்க்குமபிள்ளை கொடுத்துவாவென்றுரைத்தீர்
பாலனையின்று கொடுத்தேன்பரிவுடனே
கொடுத்தவுடனென்னைக் கோதையாள்தானடித்தாள்
வந்துவிட்டேனென்று வருந்தியுரைத்ததுவே
சிந்தைமகிழ்ந்து சிவனாருமேதுசொல்வார்
உன்மகனையிங்கே யுனக்கழைத்துநான்தருவேன்
வஞ்சமில்லாமல் மனமகிழ்ந்தாயில்லையென்றார்
அப்படியேயகற்பகவும் ஆனந்தங்கொண்டதுவே
இப்பால்நடக்கின்ற இவ்வசனஞ்சொல்லுகிறேன்
தேவருமிந்திரனுந் தேவியுந்தானதுசொல்வார்
பாலன்பசித்துப் பதறியழுதவுடன்
பாலமுதம்வாங்கப் பசுவினைத்தேடுமென்றார்
பசுவைமிகத்தேடிப் பார்த்தார்களெல்லோரும்
காடெல்லாந்தேடிக் காணோமெனவுரைத்தார்
இந்திராணியான இளங்கோதைதானழுதாள்
இந்திரனுமப்போது ஏங்கிமிகவாடி
மாயையாய்வந்து மாயமாய்ப்போச்சுதென்று
மற்றுமொருபாற்பசுவின் பாலமுதைமைந்தனுக்கு
குற்றம்வாராதபடி கொடுத்துவளர்த்தனரே
பாலகர்க்குத்தொட்டிலைப் பாங்காகச்சாய்ப்பார்காண்
வயிரம்வயிடூரியத்தால் வகைவகையாய்ச்செய்தார்காண்
சித்திபுத்திரரைச் சீர்சிறந்ததொட்டிலிலே
வைத்துத்தாலாட்ட மன்னவருஞ்சொன்னவுடன்
ஆயின்பாலூட்டி யரியதொட்டில்மேற்கிடத்தி
தொட்டிலைத்தானசைத்துச் சூழநின்றதாதியர்கள்
இந்தநல்லதொட்டிலிலே என்மகனேசித்திரைபோ
தேவேந்திரன்மணியே செம்பொன்னேதாலுறங்காய்
இந்திரனார்செல்வங்கள் ஈடேறவந்தானோ
வானுலகம்ஆள வந்துபிறந்தானோ
மைந்தராய்வந்து மனவாசைதீர்த்தானோ
எங்கள்துயர்தீர இன்றுவந்தபாலகனோ
தோகைக்கணக்குஞ் சிறந்தபெருங்கணக்கும்
மண்ணிற்கணக்கு மகாதேவர்தன்கணக்கும்
விண்ணிற்கணக்கும் விளாந்தெழுதவந்தவனோ
சந்திரசூரியர்போற் சார்ந்ததிருமகனோ
ஆதிபரன்கட்டளையில் அவதரித்தபாலகனோ
துட்டர்கணக்குந் துரோகியர்கள்தன்கணக்கும்
சிட்டர்கணக்குத் தெரிந்தெழுதவந்தவனோ
தேவேந்திரன்தவத்தாற் சிறியவுயிர்செய்யும்
நன்மைகளுந்தீமைகளு நன்றியவந்தானோ

சீராய்ச்சிவலோகஞ் சேருமின்றபுண்ணியரை
ஆராய்ந்துசொல்ல அறிவுடனேயவர்தாமே
ஆயின்வயிற்றில்அவதரித்தபாலகனே
எங்கள்அரும்பொருளோ யிந்திரனார்கண்மணியோ
எங்கள்குலம்வாழ எழுந்தருளும்நாயகமோ
இந்தப்படியாக யேற்றமின்றுதாலாட்டி
அந்தமகனை யதிதாய்வளர்க்குங்கால்
தாதிமார்தன்பாலைந் தாறுங்கச்சொன்னார்கள்
உங்கள்முலைப்பாலை யுண்ணவேநான்பிறந்தேன்
என்றறிந்துசொன்ன விளமைகுழந்தைக்கு
மந்திரநூல்வேத மகாவரிவையுண்டாக்க
வாத்தியார்தம்மை வரவழைத்தாரன்னேரம்

விருத்தம்.

இந்திரன்புதல்வருக்கு இன்பமாயோதிவைத்த
தந்திரவாத்திமார்கள் தான்அரிவோமென்றோத
மந்திரப்புதல்வனும் வகைசொல்லுமென்றுகேட்க
மந்திரயுரைசொல்லாமல் மைந்தனும்உரைசெய்தானே.

வசனம்.

அதோதெப்படியென்றால்இந்திரன்இந்திராணிஇவர்கள்காணொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்த சித்திராபுத்திரானவனுக்கு வேதங்கள் அப்பியாசம் பண்ணுவிக்கவேணுமென்று வாத்தியாரையழைப்பித்துப் பட்டணமெல்லாம் அலங்காரஞ்செய்து மகாதானங் கோதானம் வஸ்திரதானமுதலானதானங்கள்செய்து ஓமம்எக்கியங்களெல்லாஞ்செய்து சித்திரபுத்திரற்குவாத்தியார் அரிவோமென்றுசொல்ல அதற்குப் பயன்சொல்லுமென்று வாத்தியாயரிடத்திற்கேட்க அவர்சொல்ல யேதுமில்லாமல் சித்திரபுத்திரர்தானே பயன்சொல்லிப் பின்னடக்கிறகாரியங்களைச் சொல்லுகிறோம்.

நடை.

விநாயகர்பூசை விதவிதமாய்த்தான்முடித்து
ஆதிமுதலான அரிவியுங்கைக்கொடுத்து
அரியோமரியோமென் றுதாரவாய்ச்சொன்னார்கள்
ஆயிரம்பார்ப்பார் அரியோநமவெனவே
அரியென்றசொல்லுக்கு அருத்தங்களுரையுமென
அப்போதுவாத்தியார் அதன்பொருள்சொல்லாதிருக்க
நான்சொன்னபடிகேளு நல்லதொருஉத்தமரே
அரிக்குப்பொருள்சொன்னால் அஞ்சுவீரெனக்குக்
குருக்களுமாவீர் குற்றமில்லைகண்டீரே
எனக்குமோர்அஞ்ஞுவி யீசனல்லாள்வேறுமுண்டோ
மேலானவுங்களுக்கு வேதமதுசொல்லுவன்யான்
கிட்டியாய்வாசிக்க கேளுங்களென்றுசொல்லி

நன்னெறிதாலவிழ்த்து நற்பட்டமேதெரி
சைவ நால்வேதந் தழைக்கவேவாவாசித்தார்
லோகரேட்டுக்குள்ளே யுலகமெலாம்வாழுமென்று
தேவர்கள்வாழுமென்று திருவேடுவாசித்தார்
மூவர்கள்வாழுமென்று முதலேடுவாசித்தார்
அயனரன்மால்செய்கை யானதொருபேர்களும்
சமனருடவேந்தன் சபைகணத்திலுள்ளவர்காண்
சங்கரநாராயணர் தானகொடுத்தபட்டோலை
அட்டவணைபட்டோலை யதுப்படியேவாசிக்க
யாதநியார்தங்களுக்கு வந்துவெளிப்பட்டதுகாண்
தனவயலையன்றி தமிலநாளிருமோரு
அருதிமலையை யடிமையொத்திக்கண்டீரே
உம்முடையசெய்கையும் உமக்கறியப்போகாமல்
என்னுடையசீட்டி லெழுதினேனென்றசொன்னார்
என்றசொல்லிவரத்திமா ரிருக்கையாற்போற்றிசெய்து
ஈஸ்வரனார்கற்பனையோ வென்றசொல்லித்தானிருக்க
இவ்வார்த்தைதனைக்கேட்டு இந்திரனிந்திராணியுடன்
மைந்தனையங்கே மனமகிழ்ந்துமுத்தமிட்டார்
இப்படியேதானும் இருக்குஞ்சிலநாளில்
மைந்தர்பெருமான் மனமகிழ்ந்தேதசொல்வார்
பூலோகசோதனைக்கு போய்வாரோமென்றுரைத்தார்
நகரங்கள்சோதனைக்கு நாம்போகிறோமிந்திரரே
அங்கேசிலவியாச லுருகிருக்கப்போறோம்
என்றுகணக்கை யிதமுடனேதான்சுருட்டி
நன்றியுடனே புறப்பட்டார்நற்கணக்கர்
இட்டப்படியே யீஸ்வரனார்தான்கொடுத்தார்
கட்டளையிட்டபடி கணக்கெழுதப்போறோமென்றார்
அந்தக்கயிலை யரனார்கருவேலம்
சிந்தமெழுதிவர சீமலாருள்கொடுத்தார்
பத்திரமாமென்வசத்தில் தந்ததொருபட்டோலை
சீருடனேயென்வசத்தில் சிறப்பாகவிருக்குதுகாண்
பரமனார்தான்கொடுத்த பண்டாரபொக்கிஷமும்
கொடுத்தவரிசைகளை கொற்றவரேகண்டீரோ
பொன்னுலகமட்டுமல்லோ புண்ணியரேநீர்கண்டீர்
நிறைந்தபுகழ்மாதாவு நிருபிக்கத்தவிருக்க
உங்களுக்குடமேலேயோ யுரைக்களித்தார்கண்டீரோ
அண்டாண்டகோளமட்டும் அறுவளவுத்தப்பாமல்
எழுத்தாணிபட்டோலை யென்னைவசமீந்துகொடுத்தார்
முத்திரைமோதிரமும் முன்விரலிலேயணிந்தார்.
கண்டீரோநீருங் கயிலாயபதிமோதிரத்தை
இவ்வளவுதாழ்வுமுங்க ளிருவருடவாழ்வும்

புதிதானகாரியத்தைப் போய்பார்க்கவேணுமென்று
போய்வருகேவியைய பொருந்தவிடைதாருமென
வாடவையக வருமளவுநீயிருந்தால்.
பாலனைப்வந்த பலவ்விடைக்குமென்றுசொல்ல
அந்தப்பலனும் அரனருளாற்றான்கிடைக்கும்
அப்படியேயாகும் அவ்விடத்திலிருந்தவிட்டேன்
எப்படியுமென்தாயே யிங்குமங்குமாயிருப்பேன்
போகவிடையருளும் புண்ணியரேயென்றுரைத்து
மாதாவைத்தந்தையை வணங்கியிருபாதமதில்
புட்பமதுபோட்டுப் பணிந்தாரேபுண்ணியனார்
அந்நமைத்திருமகனை யன்னைபிதாதான்வாழ்த்தி
இந்திரன்வான்தேரி லேறியேயுத்தமனார்

விருத்தம்.

செய்றனனீசன்றன்பாற் சீர்பாதந்தெண்டனிட்டு
நின்றனன்மகிழ்ச்சிகூர்ந்து நிகரில்லாவுமையாள்தானும்
வந்தனன்மகனேயென்று வாரியேமுகந்துகொண்டாள்
மைந்தனுமகருவந்த வரன்முறையியம்பலுற்றான்.

வசனம்.

அதேதெப்படியென்றால் சித்திரபுத்திர நயினாரானவர் இந்திரன் இந்திராணி இவர்களைவணங்கத்துடனே யநுப்பிக்கொண்டு தேரின்மேலேறி சுவாமி கயிலையங்கிரி வாசரான பரமேசுரனையும பார்வதியம்மாளையுங்கண்டு நமஸ்காரஞ்செய்து சிந்தைகளிகூர்ந்தபிற்பாடு பார்வதியம்மாளும் மகனைக்கட்டிவாரிமுகந்துகொண்டவுடனே சித்திரபுத்திரநயினார் சுவாமியிடத்திலும் அம்மாளிடத்தும் அவ்விடத்தில் நடந்தவிருத்தாந்தமெல்லாஞ்சொல்லுகிறார்-எ-று.

நடை.

அப்பால்நடந்தும் அதிசயங்களுள்ளதெல்லாம்
செப்பமுடனுஞ் சொல்லுகிறேன்சிராக
மாதாபிதாவை மறந்திருந்தேபித்தனைநாள்
ஈஸ்வரன்சொன்னவிமை வெள்ளைவுந்தப்பாமல்
தாமரைப்பூவாய் தடாகத்திற்சென்றிருந்து
ஆவின்வயிற்றில் அவதரித்தேனுதரவாய்
இந்திரனிந்திராணி யிவர்கள்மனங்குளிர
புத்திரனெனவென்னை போற்றியேதான்வளர்த்தார்
பிறந்தவுடன்தருமம் பெருகவேசெய்திடுவாள்
என்னையுமப்போதே யீன்றதொருநற்பசுவை
என்னிமித்தமென்று இந்திராணிதானடித்தாள்
உடனேதானப்பசுவும் என்கையிலேவந்ததுவே
மற்றுமொருபசுபால் கொடுத்தென்னைவளர்த்தார்கள்
நன்றாய்வளர்த்தார்கள் நாயகியுந்நாயகனும்.

இந்தப்படியா யிதுவரையுநானிருந்தேன்
இவ்விடத்துச்சிந்தையினால் ஏக்கமிகவுண்டாகிப்
போகிறேனென்றுசொல்லேனே போர்வேந்தனப்போது
பாலவயசு பருவமுனக்கில்லையென்றார்
இவ்விடத்திற்றானு மிருக்கவேவேணுமென்றார்
இங்கிருக்கநீதி யெள்ளளவுமில்லையென்றார்
அரன்கயிலைசென்று அவ்விடத்தில்நானிருப்பேன்
அங்குமிங்குமாக இருப்பேனெனவுரைத்து
அவர்கள்விடைவாங்கி யடிபணிந்திங்குவந்தேன்
(என்று) சித்திரபுத்திரனார் இரக்கமாய்ச்சொன்னவுடன்
பகையைமிகவழைத்துப் பாலன்வந்தான்கண்டாயே
யென்றரனார்சொல்ல ஏற்றதொருநற்பசுவும்
சென்றுமகனார் திருமுகத்தைத்தான்நோக்கு
எழுந்துமிருகொம்பால் இரங்கித்தடவினதே
இப்படியேதானும் இருக்கின்றவேளையிலே
இந்திரனிந்திராணி இவர்களிருபேரும்
மகனார்தான்போன வழித்தடத்தைதானோக்கி
வந்தார்கயிலை மலைதனில்வானவர்கோன்
அப்பால்நடக்கு மதிசயத்தைகேளுமினி
சிவனாரிடத்தில் தேவேந்திரன்புலம்பிப்
புத்திரனுஞ்சத்துருவாய்ப் போனானெனவுரைத்தாய்
உரைத்தமொழிகேட்டு உமைபாகரேதுரைத்தார்
சத்துருவென்று சலியாமல்சொன்னாயே
தாயாருகே தன்பிள்ளைவந்ததென்றால்
பேயாஉனக்கிளித்தான் பேசக்கணக்குமுண்டோ
பித்தரைப்போலே பிதற்றுகிறாய்நீதானும்
நாட்டுக்கணக்கும் நமனார்பெருங்கணக்கும்
நன்மையுந்தின்மையும் நடுவெழுதவேணுமென்று
எமதருமர்தன்னிடத்தி லிருந்துகணக்கெழுத
வேணுமென்றுசொல்லி விரும்பியேநாமழைத்தோம்
எங்கிருந்தாலென்ன ஏற்றதொருஇந்திரரே
போம்பிள்ளையென்றுரைக்கப் போனாரேஇந்திரரும்
ஈஸ்வரனார்தாமும் யேற்றதொருபுத்திரரை
இப்போதுநீயும் இயமனுடவாசலுக்குச்
சித்தாந்தஞ் செய்முறைப்படியே
அத்தாந்திரக்கணக்கும் அடவாயெழுதுமென்றார்
இப்படியேதானும் இயமன்றனழைத்து
கலியனுபத்திரத்தாற் களறிகன்றான்மிருத்து
அவைக்குமுண்டாகு மனதாலிப்போது
எல்லாக்கணக்கு மியல்பாகதானெழுத
சித்திரபுத்திரரைச் செப்பாயருளினன்காண்

என்றாகயமனுக்குச் சிவனுரைத்தபின்பு
நன்றாகநன்றென்று நமஸ்கரித்து அன்னேரம்
இருபேருமொன்றாகி யேற்றவிடைதான்வாங்கி
நின்றபொழுதேதிர்மா நிமலர்அருளாலே
இருபேரும்வாழவென்று ஏற்றவிடைகொடுத்து
சுட்டகருவுட்லே கனத்தரண்டகுலமுடன்
குத்திடும்கோல்கொடுத்துக் கோலக்கடாவளித்து
இவ்வளவுந்தான்கொடுத்து எற்றபிரமாவும்
வாராய்சிவனுக்கு வழிபடிமைசெய்வார்மேல்
சிவனைநினைத்துத் திருத்தொண்டுசெய்வார்மேல்
தவத்தைநினைத்துத் தான்பூசைசெய்வார்மேல்
தருமங்கள்செய்வார்மேல் சற்றுமேசொல்லாமல்
புத்திகளுஞ்சொல்லி போகவிடைகொடுக்க
கருங்கடாமேலேறிதான் கள்ளனைத்தாளும்வைத்து
வலக்கடாவேறி வாரார்யமதருமர்
சித்திரபுத்திரருஞ் சீராகத்தேறி
நல்லமுரசுசின்னம் நன்றாய்முழங்கிவர
இருபேருமொன்றாகி யிந்திரலோகம்புகுந்தார்
இருபேருந்தாங்கள் இசையவேதானப்பசி
பாரிலுள்ளோர்தன்கணக்கைப் பார்த்தார்களப்போது
சிவகுருவேயென்று திருநீறணியாதார்
நாராயணாவென்று நாமமணியாதார்
பெற்றதாய்தந்தையைப் பேணாதபாவியர்கள்
மண்ணிலிருந்து வழக்கோரஞ்செய்தவர்கள்
அம்பலத்தில்நின்று அபவாதஞ்சொன்னவர்கள்
ஊரார்உடமைக்குப் பேராசைகொண்டவர்கள்
கல்லாக்கசடர் கலைக்குப்படியாதோர்
சிவனைவணங்காதார் திருக்கோயில்சூழாதார்
அப்பனைவணங்காதார் ஆலயத்தைமேவாதார்
பிச்சைக்குவந்தவரைப் பின்னைவாவென்பார்கள்
கன்றுவருந்தக் கறந்துபாலுண்டவர்கள்
சுற்றங்கொதிக்கச் சுறந்துபாலுண்டவர்கள்
பொட்டநாழிமறக்கால் போட்டளந்தபாவியர்கள்
பிள்ளையழித்துப் பேதமுரச்சொன்னவர்கள்
உள்ளபொருளை இல்லையென்றேயுரைத்தவர்கள்
தூரவழிக்குத் துணைவாரோமென்றுசொல்லி
ஆருமில்லாக்காட்டில் அடித்தபறித்தவர்கள்
குளிசில்லையன்றிக் குளித்திடும்பொல்லாதார்
கொண்டவனையாள்வருந்த கூத்தியார்கள்தன்னைவைத்தே
மாதாபிதாவருந்த வயிறுவளர்த்திடுவார்
இட்டுண்டுவாழாதார் ஏற்றவர்க்குமில்லையென்பார்

அவர்களைப்போல அனுக்கனைக்குக்கப்பாமல்
செய்யவென்றநல்லனார்க்குச் சேரமேயதானெழுதி
செட்டிகள்வீதியிலே சிறப்பாகவந்தார்காண்
அவர்களெல்லாமங்கே படிபணிந்துவாய்புதைத்து
இல்லாச்சரக்கை விலைச்சரக்காய்விற்றிடுவோம்
செல்லாப்பணத்தை செலுத்துவோங்கண்மரே
எல்லாப்பிழையும் பொறுத்தருளுமென்றுசொல்ல
அவர்களுக்குச்சொல்லி வமைத்தபடிதானெழுதி
வெள்ளாளரெல்லாம் வேண்டியதெல்லாம்படைத்தும்
நெல்லுகளைநாங்கள் உலர்த்தாமல்விட்டிடுவோம்
கள்ளமரக்கால்நாழி கலந்துமிகவிற்றிடுவோம்
என்றுசொல்லியெங்கள் குற்றம்பொறுமெனவே
இவர்களுக்குத்தக்க ஏற்றபடிதானெழுதி
பட்டமார்வீதியிலே வந்தார்பரிவுடனே
பட்டமார்வந்து பணிந்துமிகத்தொழுது
குளிக்காமல்சேவிப்போம் கோவிலையும் பூசிப்போம்
பால்தயிருநெய்யும் பறித்தெடுத்துசாப்பிடுவோம்
வருதமானதனை யேற்றிடுவோமென்றுசொல்ல
இவர்களுக்குமங்கே ஏற்றபடிதானெழுதி
அந்தந்தச்சாதிதெரு அடைவாகத்தான்பார்த்து
அவரவர்கள்செய்யும்வகை பதிக்கவேதானெழுதி
பாவபுண்ணியங்கள் பகுத்துமேதானெழுதி
புண்ணியஞ்செய்வோர்க்கு புதுமைகள்செய்யுமென்றார்
புண்ணியஞ்செய்வோரைப் புதுமையாயெடுத்தெழுதி
பசியாமலன்னம் பாங்குடனேகொடுத்தவரை
இடுக்கணுடனே ஏமாறிவந்தவர்க்கு
உடுத்தப்புடவை யுகந்தளித்தோர்தங்களையும்
பிச்சையுமிட்டுப் பெரியவிடங்கொடுத்து
மகேசரபூசைக்கு மடங்கட்டிவைத்தவரை
சாலைமருஞ் சத்திரமும்வைத்தவரை
சிவபூசைதவபூசை குருபூசைசெய்வோரை
நான்குதிசைவிளங்க நந்தவனம்வைத்தவரை
ஆலயங்கள்கட்டி யன்னமிகக்கொடுப்போரை
இடித்தபழங்கோயி லெடுத்துப்புதுப்பித்தவரை
தாகத்துக்காகநல்ல தண்ணீர்கொடுத்தவரை
பொசித்தவயிர்தனக்கும் போகவிட்டவரை
இராக்காலப்பட்டினிவறை விதமாகத்தீர்த்தவரை
அந்தணர்க்குஅக்ராரம் அடுக்கடுக்காய்ச்செய்தவரை
பஞ்சம்வருங்காலம் பகுந்தன்னமிட்டவரை
பெரியோர்கள்தங்களையும் பேணிநடந்தவரை
விருந்துகள்வந்தால வேறுவைத்துவுண்ணாமல்

வைக்காவாதகலில் யந்தசகங்கள்செய்பாரை
நெய்விளக்குமாவிளக்கு நேமமாய்ச்செய்தவரை
மாதானங்கோதானம் வஸ்திரதானமுதலாய்
தானங்களெல்லாம் தயவாகச்செய்தவரை
வழக்கோரஞ்சொல்லாமல் மன்னருடன்சேர்ந்தவரை
சிவனைவணங்கிச் சிவபூசைசெய்தவரை
செருப்புக்குடைமுதலாய்ச் சிறந்தபிராமணர்க்குக்
கோடைகாலத்தில் கொடுத்தன்னமிட்டவரை
பிள்ளைபால்வார்த்தோரைப் பிணிக்குமருந்தளித்தோரை
அதிதிபரதேசிபருக் கன்னமிட்டுண்டவரை
சூரியனையெக்கனைத் தோத்திரங்கள்செய்வோரை
பவுரணையில்கவ்விரதம் பத்தியாயிருந்தோரை
பத்தாவின்மேலாசை பண்பாகவைத்தவரை
குருவையுமறவாரைக் கொலைகளவுசெய்யாரை
தனவலிடசொல்லைக் கட்டாய்நடத்தினரை
ஆறுகுளங்கள்தனிலணைகட்டிவைத்தவரை
வழிப்பறியாமல் வாகாகக்காத்தோரை
கன்றுக்குப்பால்குடிக்குமட்டுங் கருத்தாகவிட்டவரை
தருமங்கள்செய்வோரைத் தப்பாமலெழுதிவைத்தேன்
ஒளியுமறைந்தவர்க்கு ஊன்றுகோல்தான்கொடுப்போர்
காய்ந்ததலைக்கெண்ணெய்ப் கட்டாகத்தானளிப்போர்
ஆலயவணங்கி யநுதினமுங்காண்தொழுவோர்
விநாயகர்பூசை விருப்பமாய்ச்செய்தவர்கள்
பள்ளிக்கூடங்கட்டிப் பாங்காகவாத்தியார்க்குச்
சம்பளமும்பணமும் தான்கொடுத்தோர்தங்களையும்
கந்தனையெந்நாளுங் கருதித்தொழுதிடுவோர்
மாதாபிதாவை மகிழ்ந்துநித்தந்தொழுவோர்
வேதங்களாகமங்கள் விதிப்படியேதானடப்போர்
குருதக்ஷிசெய்தன்றி குறையாமற்றானடப்போர்
விரதங்கள்தனைமீள விருப்பமாய்ச்செய்தவரும்
வண்ணாநாவிதன்கூலி மகிழ்ந்தேதான்கொடுத்தோர்
தருமங்கள்செய்வோரைத் தப்பாமற்றானெழுதி
இப்படிக்கொத்த இயல்புடையபுண்ணியரைச்
செப்பமுடனறிந்து செய்தபிழைபொறுத்து
தப்பாமலீசுரனார் தன்னடியிற்றான்சேர்ந்து
வைகுண்டலோகத்தும் வகையுடனேதான்சேர்த்து
அந்தவுலகந்தி லமரர்களைப்போலிருக்க
புண்ணியஞ்செய்தவர்கள் போதவேதானிருக்கக்
கயிலைக்குவடபுரத்திற் கனவனமுமுண்டாக்கி

பூங்காவனத்திற் புஷ்பங்களுண்டாக்கி
செய்கனிகளுங் கனிகளெல்லாங் கனிகளையுமுண்டாக்கி
எப்போதுஞ்சிவனை இன்பமாய்ப்பூசைசெய்ய
பணிவிடைகள்செய்யாமலே பாக்காகவுண்டிப்பவனி
அவ்விடத்திலேயிருக்க அன்பாகச்செய்தது
வைகுண்டமெனுஞ்சுகம் வாழ்ந்திருக்கதாமெனறுதி
பாவியர்க்குதன்பப் பலவினையெழுதாகிறார்
அட்டைக்குழியாம் அழுகுபுழுக்குழியும்
கிருமிவலைக்குழிகள் வேலுகச்செய்தார்காண்
மிருகங்கள்வாழ்குழிகள் வேலுகச்செய்தார்காண்
அகில்கிடங்குவெட்டி யதிலேயனல்வளாத்தி
முள்ளுவனங்களையு மோசமாய்ச்செய்தார்காண்
நூற்பாலம்மயிர்ப்பாலம் நூதனமாய்ச்செய்தார்காண்
காடுங்கறடுங் கல்லுமிகவுண்டாகி
சற்றுநிழலில்லாமல் தவிக்கவேசெய்தார்காண்
நரகக்குழியும் நடுங்கச்செய்துவைத்தார்
மெத்தவேயுண்டாக்கி விபரிதையாய் ஆயுதமும்
ஆயிரங்கிங்கிலியர் அசைக்கவொண்ணாச்செக்குகளும்
இரும்புத்தூணுவனாச்சி யேற்றபடிநிறுத்தி
செப்புத்தூணுமனாச்சி சேரவேதானிறுத்தி
இருப்புமுக்காலிகளை எத்தனையோகாச்சிவைத்தார்
செவிகளுக்குநாராசஞ் சேரவேயுண்டாக்கி
உச்சிமுதலா யுள்ளங்கால்தன்வரைக்கும்
வகைவகையாயாணி வரிசையாய்த்தானடித்து
தொறண்டிவலைகள் தோற்பவிவுண்டாக்கி
இந்தவகைப்படியே எள்ளவுந்தப்பாமல்
பாவபுண்ணியர்களுக்குப் பருந்தவங்கைசெய்தபின்பு
இந்திரனிந்திராணி யிவர்கள்பாற்போகலுற்றார்
அப்பால்நடக்கு மதிசயங்களுள்ளதெல்லாம்
செப்பமுடனோதுஞ் சொல்லுகிறேன்கேளுமென்றார்
மாதாவின்றன்னருகே வந்தார்பெருங்கணக்கர்
எமதருமராசனு மிபல்பாகமங்கிருந்தார்
தந்தையரைவணங்கித் தாயார்தம்பாதமதில்
நமஸ்கரித்ததன்மகனை நன்றாகவேவாழ்வாய்
என்றுசொல்லியுத்தமனை இருகையாற்றெடுத்து
கன்னல்மொழியாள் கன்னவாயில்முத்தமிட்டாள்
முத்தமிட்டபோது முன்னிலற்காதியர்கள்
எண்ணெய்ப்பலகாரினை யெடுத்ததங்கேதான்போட்டு
பொற்கிண்ணிகளணிந்த போதாவெண்ணெயிட்டு
எண்ணெய்க்காப்புஞ்செய்ய எழுந்தருளவேணுமென்றார்

எண்ணைக்காப்பிட்டபின்பு எற்றதலைதான்கோதி
நீர்த்தமுமாடித் திருநீறுந்தானணிந்து
சிவனைத்தொழுது சிவபூசைதான்முடித்து
வேதப்பிராமணர்க்கு வேண்டியதானங்கொடுத்து
அதிதிபரதேசியர்க்கு அன்னமிகக்கொடுத்து
மகேசுரபூசையை வண்மையுடன்செய்தபின்பு
ஆபரணமுள்ளதெல்லாம் அழகழகாய்த்தான்பூண்டு
புட்பாதிகளெல்லாம் போதவேதான்முடித்து
போசனச்சாலைக்குப் போயிருந்தாருத்தமனார்
நாடாளும்இந்திரரும் நாகமடந்தையரும்
தலைவாழையிலையறுத்து தங்கத்தகடொத்தி
பூமிதனில்வைத்து பொன்னின்முக்காலிவைத்து
மாணிக்கவட்டிலை வைத்தார்கள்முன்பாக
கைக்குநீர்வார்த்துக் கறிவகைகளுள்ளதெல்லாம்
சுற்றுக்கறிகளெல்லாம் சேரவேதான்படைத்து
தும்பைப்பூப்போலமுது சொரிந்துநறுநெய்வார்த்து
தம்பியரையுண்ணென்று தடவினார்முதுகுதனை
அப்போதுஉத்தமனார் அவர்கள்முகநோக்கி
உன்வீட்டிலேயமுது உண்பமேயாமாகில்
உன்வயிற்றில்வந்து பிறப்பேன்காண்மாதாவே
யென்றபொழுதில் இயல்பானமாதாவும்
நின்றுபரதவித்து நெடுமூச்சுத்தானெறிந்து
அகமகிழச்சந்ததிதான் அறியாதபாவியென்று
காதல்மிகவில்லாத கன்னியிருந்தென்னவென்று
போதமயங்கியே போய்சேர்ந்தாள்பஞ்சணையில்
மாதர்மயங்கியபின் மைந்தரெழுந்திருந்து
உண்ணவேதாருமென உவந்துரைக்கஅப்போது
தண்ணீர்குடித்தவுடன் தாகந்தெளிந்தாற்போல்
கைதொழுதுபாலகனைக் கட்டியெடுத்தணைத்து
மைவிழியாள்தானும் மடியிலெடுத்துவைத்து
வருக்கைப்பலாச்சுளையு மற்றுமுள்ளநற்கனியும்
சர்க்கரைநற்சீனி தாரணியுள்ளதெல்லாம்
திரட்டுப்பால்தன்னையுஞ் சிறக்கவேதான்படைக்கப்
பாங்குடனேயுத்தமனார் பரிந்தமுதுசெய்யலுற்றார்
கைகழுவிச்சுத்திபண்ணிக் கனகமணிபாசனத்தில்
அடைக்காய்வெள்ளிலையும் ஆனபரிமளங்கள்
சிறப்பாகத்தான்கொடுத்துச் சிரதைமகிழ்ந்தங்குரைப்பார்
இயமலோகக்கணக்கு எழுதவேபோவாய்நீ
அற்பமாங்குற்றங்கள் அக்கணக்கிலெழுதாமல்
சொற்பமாங்குற்றமதைத் தொகைபடுத்தாமற்கணக்கை

எழுதிமுடித்திடுவார் எம்மகனேயென்றுசொல்ல
ஏதுகுற்றஞ்சொன்னீர் என்னுடையமாதாவே
நல்லவாழைமயிலையறுத்துத் தானனைக்குப்போட்டதுவும்
குற்றமென்றபட்டோலை கொண்டேனென்மாதாவே
யென்றுசொல்லிப்பேசி யிருக்கின்றஅந்நேரம்
யெமதர்மராச னியல்பாகத்தானழைக்க
அந்தமொழிகேட்டு அம்பேரம்பலகாரம்
மைந்தர்பெருமாள் மாளிகையினுட்புகுந்து
போகவிடைதாருமென்று பொருந்தவேதாமுரைத்தார்
வந்துதொழுத மகனுரைத்தான்பார்த்து
வாரியெடுத்து மார்போடேதானணைத்து
இந்திரனுடனே யிந்திராணிமனமகிழ்ந்து
தருமராசனிட்டதிற் றுமொருவார்த்தைசொல்வார்
புத்திரர்பின்வருவார் போமுன்பெனவுரைத்தார்
அந்தப்படிதருமராசனும்போகுற்றான்
போனார்யமதருமர் பூவுலகிற்சென்னையுடன்
அப்பால்நடக்கிற அதிசயத்தைக்கேளுங்கள்
மிருகண்டன்நற்கதையை மெய்யாகச்சொல்லுகிறேன்
வருந்திமிருகண்டன மகனுமேவேணுமென்று
பாதாளந்தான்றவெட்டிப் பதிவாய்நல்வளர்த்த
வோமகுண்டமத்திமிலே யுயர்ந்தகம்பம்நாட்டியந்தக்
கம்பத்திலேறி கால்கிரலேததானூன்றி
வேதங்கள்அக்கினி மேலேபடர்ந்தெரிய
ஈசனேபிள்ளையரு ளென்றேதவமிருந்தார்
தண்ணீருந்தாமற் சருகுப்பொசியாமல்
இருந்தான்தவசு ஈராண்டோவெட்டுடனே
வருந்தித்தவசிருந்தான் மன்னிமிருகண்டன்
அந்தத்தவத்தருமை யாருருந்தாமறிந்து
தவசிவடிவாகத் தானெழுந்தார்சங்கரரும்
அப்போதுஉமையவளு மப்படியேதானும்வந்தாள்
இருபேருந்தவசியா யேகினார்தவத்தருகே
மிருகண்டன்செய்தவத்தை மெய்யாகக்கண்டார்காண்
அப்போமிருகண்டன் அரனுரைத்தான்தொழுது

விருத்தம்.

அய்யனேபோற்றிபோற்றி யறம்வளர்த்தவனேபோற்றி
செய்யனேபோற்றிபோற்றி திருக்கயிலாசாபோற்றி
வையவேதவசியாகப் பார்தனிலுதித்தாய்போற்றி
யுய்யவேயடியேற்கன்பா யொருமைந்தனருள்வாய்போற்றி.

நடை. என்றமொழிகேட்டு இருவருமனமகிழ்ந்து
சிந்தையுடனே திருவாக்குத்தானுரைப்பார்

வாராய்மிருகண்டா மதலையைநாந்தருவோம்
சிறகவேவயசு தீர்க்காயுசாயிருந்தால்
கல்வியறிவில்லாமற் கசடனாய்க்காணிருப்பான்
அல்லதுகல்வி யறிவுடையனாயிருந்தால்
பதினறுவயதுதனிற் பரிக்ஷையிறந்திடுவான்
ஆனதினலிந்த வகைதனிலேயாவன்பிள்ளை
எந்தவகையா யிருக்கவேணுமென்றார்.
அப்போமிருகண்டன் ஆராயுஞ்சலியனைக்
தவத்தினில்மிக்கோனைத் தந்தருள்வாய்பிள்ளையென்று
தெண்டனிட்டபோது திருமகேசுரனருளி
அம்மையுமையவளும் ஆனைபாகேயன்வரும்
இடபமதிலேறி யேகினார்கயிலைதனில்
மிருகண்டனுந மிக்கத்தவமுடித்து
கலம்பொருவேதாணிருந்து நன்றாகவாழ்க்கையிலே
வந்துபிறந்தான் மகவாகமார்க்கண்டன்
சாஸ்திரபுராணமெல்லாம் சதுராகத்தான் படித்து
வேதங்களோதி விளங்கினர்மார்க்கண்டன்
அப்பால்நடக்கு மதிசயத்தைக்கேளுமினி
விலவர்முனி விருப்பமுடன் தேடிந்து
மந்தாரைப்பிச்சி மருவற்பூக்களுடன்
செண்பகமுமல்லிகையுஞ் சேர்ந்தஅலரியுடன்
புஷ்பவகைகளெல்லாம் போதவேதானெடுத்து
தீர்த்தங்களாடித் திருநீறுந்தானணிந்து
கண்டியணிந்தைந்தெழுத்தைக் கருத்திலேதானமைத்து
சிவனைத்தொழுது சிவபூசைசெய்யலுற்றான்
அல்லும்பகலும் அரைநாழிகையிரியாமல்
அந்தமுடன்சிவனை யன்பாகப்பூசைசெய்தான்
தோத்திரங்கள்தானும் துலங்கவேசொல்லலுற்றான்.

விருத்தம்.

அண்டர்கட்கரியாய்போற்றி யடியவர்க்கெளியாய்போற்றி
வண்டமிழ்ப்பாண்டிநாடு வாழுமன்கையற்ப்போற்றி
கண்டவர்க்கினியமேனி காட்டியென்சென்னிமீதில்
முண்டகத்திருத்தாள்வைத்த முத்தனேபோற்றிபோற்றி
வேதநாயகனேபோற்றி விண்ணவர்தலைவாபோற்றி
மாதொருபாகபோற்றி மறுசமயங்கள்மாயப்
பேதகஞ்செய்வாய்போற்றி மின்ஞானபோற்றியான்செய்
பாதகமனைத்துந்தீர்க்கும் பராபரபோற்றிபோற்றி.

நடை. இப்படித்தோத்திரங்கள் இயம்பிமிகப்பணிந்து
பழுதுகளொன்றுமில பயனேயேகேழுவார்
இந்தப்படியே யிருக்குந்தறுவாயில

ஆண்பெதினறும் யாச்சுதேயாங்கவர்க்கு
அப்போதயமதன்மர் அருகில்னின்றதூதுவரை
மார்க்கண்டமாமுனிக்கு வயதுபதினுறச்சு
மார்க்கண்டன்றன்னை சவலமையுமென்றுரைக்க
அந்தமொழிகேட்டு அனபெருந்தூதுவர்கள்
சென்றவனைத்தேடிச் சீக்கிரத்தில்வந்தார்கள்
அப்போதும்மார்க்கண்டன் அனபெருமாள்கோயில்நிற்க
நின்றமார்க்கண்டனையு நீர்வாருமென்றுரைத்தார்
அப்போதுதூதனுரைத்தான் அன்பாகத்தான்பார்த்து
நீங்களும்யாரென்று வெடுத்துரைத்தாரந்நேரம்
இயமதருமராசன் இயல்தூதர்களெல்லாம்
எங்களரசனும்மை யினிமையாய்த்த னழைத்தான்
எங்கள்வயசு மொருபதினுறச்சுமென்று
வந்தோமுமையழைக்க வாருமென்றுதானுரைக்க
மார்க்கண்டனுரு மனம்நொந்தேயுரைப்பார்
தார்கொன்றைசூடுகின்ற சங்கரனைததானினைந்து
வந்தகொருதூதுவரே வார்த்தைசொல்லுமேதுங்கள்
அந்தமுடனுங்களை யழைத்துவரச்சொன்னவனும்
முந்திமிருந்தவனே முறைசெய்யவந்தவனே
எந்தயியமனெனையழைக்கச்சொன்னவன்காண்
என்றபொழுதில் யமதூதரேங்கிநின்றே
இவருபிரைத்தான்பிடிக்க இசையாதென்றேடிவந்து
எமதருமராசன்பா லிசைக்கிறார்தூதுவர்கள்
மார்க்கண்டனன்னை வரவழைக்கச்சொன்னீரே
அவன்சொன்னவார்த்தை யடியேன்உரைக்கிறோம்
முந்திமிருந்தவனே முறைசெய்யவந்தவனே
உங்களியமன் ஒளித்தோடிப்போவான்காண்
வந்தபடியே வழிபார்த்த ஓடுமென்றார்
உடனேபயந்து ஓடிவந்தோமென்றனரே
அந்தமொழிகேட்டு அப்போதயமதன்மர்
கோபித்துகண்சிவந்து கூற்றுவனுமந்நேரம்

விருத்தம்.

அரியுமயனுந்தெரியாத அரனைநோக்கித்தவம்பண்ணிப்
பிரியமுடனேமிருகண்டன் பெற்றபிள்ளையுயிர்சோர
எரியுங்குஞ்சியுளகூற்ற னெடுத்தான்சூலத்துடன்பாசம்
விரியுங்கடல்சூழுலகமெல்லாம் வெற்றிபிறக்கத்தோன்றினனே.
தெரியுங்கடற்போற்கோபமுண்ட சேனையெல்லாம்புடைசூழக்
கரியுமலைபோல்செம்மலைபோல் கடுகேநடந்தான்வழியின்மேற்

பெரியகடாவின்மீதேறிப் பிறைபோல்வளர்ந்தவயிறுகளும்
எரியும்விளக்கின்சுடர்போல இரண்டுவிழியும்பொறிசிதற.

வசனம்.

அகோ தெப்படியென்றால் மார்க்கண்டனுக்கு வயசுபதினறுன றுடனே தூதர்களை யனுப்பிக் கூட்டிவரச் சொல்ல மார்க்கண்டனானவன் சுவாமி கயிலயங்கிரிவாசர் திருவடியைத் தியானித்துக்கொண்டுவந்த தூதரை நிராகரித்து எமதன்மராசனையுஞ் சட்டைபண்ணாமற் சொன்னசெய்தியைத் தூதரானவர் தருமராசாவினிடத்திற் போயறிவிக்கத் தருமராசன் மிகுந்த கோபங்கொண்டு கண்களிரண்டு நெருப்புப்பொறி பறக்கத்தக்கதாக அண்டங்கள் மலைகளெல்லா நடுநடுங்கத்தக்கதாக தேவர்களெல்லாம் வெருண்டோடத்தக்கதாகவயிரமுடிதரித்தும் புசங்களிரண்டிலும் ஆயிரங்கால்கள் தூக்கப்படாநின்ற உடைவாளும் சரிகையுங்கட்டி ஆயுதவரிசைகளிற் சிலஆயுதமும் இடுப்புகளில் வரைந்து கட்டிப் பாசக்கயிறுந் தண்டாயுதமெடுத்து கருங்கடாவின்மேற் மேலேறிக்கொண்டு வெற்றிச்சங்கூதி வீரமுரசறைந்து இருபுறமுஞ் சேனைதளங்கள் சூழ்ந்துவர ஆயிரங்காலாள்கள் ஆயுதபாணிகளுடனே வரவும் ஒவ்வொருகொம்பு இரண்டுநாழிகைப் பரப்புநீளம் வளர்ந்திருக்கப்படாநின்ற கருங்கடாவானது இரண்டாயிரம்வரவும் மீசைகள் படபடவென்று துடிக்கத்தக்கதாகவும் அண்டபுவனங்களெல்லாம் அதிரத்தக்கதாகவும் வலதுதுடைதட்டி மார்க்கண்டனைத் தேடப்புறப்பட்டான்.

நடை.

வாரார்எமதன்மார் மார்க்கண்டர்தனைத்தேடி
இயமதன்மன்அங்குவரும் இரைச்சல்மிககேட்டு
மார்க்கண்டன்தானு மனதுமிகநடுங்கி
என்செய்வோமென்று ஈஸ்வரரைத்தானினைத்து
தஞ்சமென்றுசொல்லிச் சரணம்பணியலுற்றான்

விருத்தம்.

கண்டான்பாலன்காலனையுங் கண்ணீர்மிகத்ததும்பி
அண்டர்பெருமான்றனைப்பார்த்தே யடியேன்செய்தகுற்றங்க
ளுண்டானாலும்பொறுத்தருள்வா யுற்றகாலனென்னுயிரைக்
கொண்டேகின்றுபோகாமற் கோவேகாத்துக்கொள்வாயே.

எழுந்தேயிரங்கிமார்க்கண்டன் இறைவன்பாதமலர்போற்றி
நின்றேதொழுதுகும்பிட்டு நெடுமூச்செறிந்துநின்றவனும்
நன்றேயுனதுபத்தினி நமனுமுனைப்பற்றிடல்யானுஞ்
சென்றேதேடிப்போம்மார்க்கண்டா தெரிவாயென்றேசொல்லி.

அஞ்சாதுனைக்காத்திடுவோ மென்றுமுகன்தன்னுனை
துஞ்சாதேநீயவனுடனே சொல்லாதொன்றும்பேசாதே
மஞ்சார்பொழில்சூழுலகறிய மதியாதுன்மேல்வருவானேன்
நஞ்சார்கூர்வாள்மழுவாலே நமனைக்கொல்வோமெனச்சொல்ல.

கோலஞ்செய்துமலர்தூவிக் குறித்துன்பாதம்வணங்கிடுவேன்
ஆலமுண்டமிடற்றானே அடியேனெஞ்சங்கலங்காமற்
சூலபாசந்தன்னுடனே சுற்றிநின்றானனுயிரைக்
காலனைக்கொண்டுபோகாமற் காத்துக்கொள்வாய்கொள்வாயே.

அத்தனேபோற்றிபோற்றி அடியவர்க்கெளியாய்போற்றி
பித்தனேபோற்றிபோற்றி பிறைமுடித்தாடிபோற்றி
நித்தனேபோற்றிபோற்றி நிருமலாபோற்றிபோற்றி
யுற்றதோர்கூத்தன்வந்தா னுதைத்துடன்கொல்லுவாயே.

ஆதிப்பொருளாயலைகடலா யணுவுக்கணுவாயாவருக்கு
நீதிப்பானாய்நிற்குணனாய் நினைவுமடியார்க்கெளியோனாய்ச்
சோதிவடிவாய்ச்சடையொளியாய்த் தோன்றுஞ்சிவனேமாமறலி
மோதிப்பாசமெறியவந்தான் முழுதாசனுன்னடைக்கலமே.

வசனம். இப்படி மார்க்கண்டன் தோத்திரம் பண்ணுவதைக் கேட்டு எமதருமாராஜன் சொல்லுகிறான்.

விருத்தம்.

வாடாகெடுவாய்மார்க்கண்டா மறந்தாலும்விடுவேனோ
ஓடார்காத்தாரெல்செய்வா ருன்னைப்பிடித்துக்கொடுபொழுது
சூடாமணிசேர்விழியிரண்டுஞ் சொருகச்சொருகச்சூலத்தாற்
கூடாவுயிரைப்பிடித்தேநான் கொண்டேபோவேன்கண்டாயே.

வசனம். என்னடா மார்க்கண்டா என்னுடைய மனுஷன்வந்து உன்னையழைத்தால் அதற்குவராமலிருந்து மேலானவார்த்தை சொன்னாயல்லவா உன்னைவிடத்தக்கதில்லை கர்த்தாவானவர் உன்னைக் கொண்டோடும்போது தடுக்கமாட்டாரென்று வெகுசாய்த் தருமராசன் மார்க்கண்டனைப் பயப்படுத்துகிறான் எ-று

விருத்தம்.

ஈசன்றன்னையென்செயலா மிந்தப்பதத்தையினியவரால்
வாசஞ்செய்துமலரிட்டு வணங்கினாலுமாற்றிது
மோசம்போகேனுன்றனக்கு முடிந்தநாளும்வந்ததுகாண்
பாசங்கொண்டேயுன்னுயிரைப் பற்றிமிகவும்பறிப்பேனே.

ஈரெட்டொழியவயசுனக்கு ஏற்றமுண்டோஎன்னுடனே
மார்பைத்தட்டியெதிராடி வலிமைசொன்னாய்மார்க்கண்டா
பாரிப்போதேநானுன்னைப் பரமேஸ்வரரும்பார்த்திருக்கக்
கூட்டொளிர்வேல்தன்னாலே கொண்டேபோவேன்கண்டாயே.

வசனம். அகோதெப்படியென்றால் எமதர்ம மகாராஜனானவன் மார்க்கண்டனைப்பார்த்து அடா மார்க்கண்டா நீயத்தனை தவத்தோடுங் கூடிப் பூசை செய்தாலும் உனக்குப் பதினாறு வயசுக்குமேல் இருப்பில்லையே கர்த்தாதானென்னசெய்வார் அவர் பார்த்திருக்கக்கொண்டு போகிறேனென்றுகருங்கடாவின்பேரில்ஏறியிருந்த எமதருமராசன்

கயிறுபட்டிழுக்கும்படியாச்சதேயென்று சன்னீரானது தாரைதா ரையாக வோடுகிறது கலாமிருந்தெரிந்து கோபமுண்டாகி எமதர் மராசனை யாக்கினை செய்யப்போகிறார்.

விருத்தம்.

வாழுமூலலிலருள்பெற்ற மார்க்கண்டனைத்தான்காத்திடவே
யேழைமுபாகடமூழ்ந்திருந்த இடத்தகாலின்கீட்டி
வீழவுதைத்தார்லிம்பாக்க வன்றுமன்றுந்தானடிர
ஆழியுடைத்தாற்போலியமன் அலறிவீழ்ந்தானவனியிலே.

நடை.

அப்பால்நடக்கும் அதிசயத்தைச்சொல்லுகிறேன்
பாதத்தாலேயுதைக்கப் பாதாளத்தேவிழுந்து
இறந்தானேயமன் ஏற்றதொருதேவர்களும்
மார்க்கண்டாநீயு மயங்காதேயென்றுரைத்து
என்றுபதினாறு விருக்கயாயுங்கொடுத்து
ஒன்றுக்குமஞ்சாதே யுன்னைக்காத்திடுவோம்
என்றுசிவனு ரிவ்வசனஞ்சொல்லிடவே
மார்க்கண்டன்மனதுக்குள் மகாமகிழ்ச்சியுடன்வாழ்ந்திருந்தான்
அன்றுமுதலுலகிலுள்ள ஆருயிர்கள் இறவாமல்
இருந்ததினாலென்னசெய்வாள் ஏற்றதொருபூமிமாது
கன்றிமுகம்வாடி கண்ணிடத்துநீர்சொரிந்து
சாவார்களில்லாமற் றனைப்பாரமாச்சுதினிப்
பூமிபெருகாதிருக்கப் புனிதாருள்வேணுமென்று
பைந்தொடியாள்பூமாது பாரஞ்சுமந்தலுத்து
இந்திரனார்தம்மிடத்திற் போம்வாமெனநினைந்து
சித்திரபுத்திரரைச் சென்றுகண்டுசொல்வோமென்று
பூமாதுமங்கே புனிதமாயோடிவந்தாள்
வந்துநின்று இந்திரனார் வாயத்ததிருமாளிகையில்
முறையிட்டுச்சொல்லுகிறாள் முடிநான்காண்மறலியுமே
என்னுற்சுமக்கக் கூடுதில்லையென்றுரைத்தாள்
அப்போது-சித்திரபுத்திரர் ஆதரவாய்வந்தாகி று
நாராயணரிடத்தில் நண்ணியேசொல்லுமென
நின்றுசலித்து நெடுமூச்சுத்தானெறிந்து
ஆரமூலமாது அலறியேசென்றுகண்டாள்

விருத்தம்.

பாலன்செய்தநற்பாக்கியத்தாற் பரமேஸ்வரனார்பாதத்தாற்
காலன்பட்டுவிழுந்திறந்தான் அதனாலுயிர்கள்காசினியிற்
சாலமிகுந்துசாவன்றித் தரணியில்பாரமாச்சுதென்று
ஞாலமடந்தைவருத்தமுற்று நாராயணனைப்போற்றினளே

நடை

அப்போதுமாயவரும் ஆனதொருபூமிமாது
உன்னுடையபார மொழித்தருள்வேன்நானும்

8

போமென்றுசொல்லி யனுப்பினார்பூமாதை
அப்போதுதன்கணக்குத் தமைக்கேயருள்புரிவார்
சம்புவேகாலத்திற்கு முலிருக்குப் படைத்தவரை
இங்கேயழைத்தோடி வாருமென்றுரைக்கே
கணங்களுமோடியே கணக்கரிடம்வந்துகண்டு
நாராயணருண்மை நன்றுபழைக்கவுற்றார்
என்றமொழிகேட்டவுடன் சித்திரபுத்திரரும்
சிந்தைமகிழ்ந்து சீக்கிரமாய்த்தாமெழுந்து
நாடாளுமிந்திரற்கும் நாகமடந்தையற்கும்
கூடவேதெண்டனிட்டு கூப்பிட் டெழுந்திருந்து
இனித்தானையப்புமென்று இணையடியைக்கைதொழுதே
நல்லதென்று இந்திரரும் நாயகியுமுளமகிழ்ந்து
போய்வாருமென்று புகழ்ந்துவிடைகொடுத்தார்
சேனைகள்சூழ்ந்துவரச் செம்பொன்விமானமேறிச்
சித்திரபுத்திரனார் சிவன் சபைபோய்ச்சேர்ந்தார்
முப்பத்துமுக்கோடி தேவர்களும்வந்துகண்டார்
நாற்பத்துநாற்கோடி ரிஷிகளும்வந்துகண்டார்
சந்திரருஞ்சூரியருந் தானவரும்வானவரும்
வந்துமுனிவரெல்லாம் வணங்குறாரப்போது
சித்திரபுத்திரருஞ் சிவனடிவணங்கி
அருச்சனைகள்செய்து அரன்பாதம்போய்ப்பணிந்தார்
வந்துபணிந்த மகனைத்தானெடுத்து
நன்மையுந்தன்மையும் நடுவெழுதவந்தீரோ
என்றரனார்சனிகூற சித்திரபுத்திரரும்
பத்தியுடன்பட்டோலை வாசித்தார்பாங்காக
அப்போதுவிஷ்ணுவும் அகமகிழ்ந்தேயடிவணங்கி
சிவன்கயிலைசென்று செப்புகிறார்நல்வசனம்
எமதருமராசன் இறந்ததினாற்பூமாது
சாவதறியிருந்தவுயிர் தனைசுமக்கமாட்டாமல்
அல்லல்படுந்துயர மாற்றவேவேணுமென்று
சிவனாரிடத்திற் செப்பினாரப்போது
எல்லோருங்கூடி யிசைந்தார்சிவனிடத்தில்
சிவனாருமங்கே சித்தம்மகிழ்ந்திடவே
பிரமாவுமன்போடு பெருமையாய்த்தானுரைப்பார்
வயசுபதினாறுச் சிருட்டித்தநாமவர்க்குக்
கணக்குப்படிசென்றான் காலத்தையறிந்துநமன்
தவத்தைமிகப்பாராமற் றானேதான்மாண்டவன்காண்
புத்திக்குறைச்சலினாற் போய்மாண்டானந்தநமன்
பிள்ளைகள்செய்தகுற்றம் பொறுத்தருளவேணுமையா
ஆரிடத்திற்சொல்வோம் அரனேநீரல்லாமல்
வேறொருவருண்டோ விண்ணப்பங்கேட்கவென்றார்

இப்படியேவானவர்கள் எல்லோருமுறையிடவே
சித்தமிரங்கிச் சிவனுநயமேறசொல்வார்
இப்படியேயிமயனினிமேலுஞ்செய்யாமல்
சொல்லுகிறோம்கேளுங்கள் சுருக்காயென்றுசொல்வார்
அன்னதானஞ்செய்வோர் அருங்கோவில்கட்டினவர்
கன்னிகாதானஞ்செய்வோர் கன்றுக்குப்பால்விட்டோர்கள்
சிவன்பாகம்சென்றவர்கள் சிவபூசைசெய்திடுவோர்
அன்னைபிதாவை யனுதினமுந்தான்தொழுவார்
கோவிலுக்குநித்தம்போய்க் கும்பிட்டுவருவோர்கள்
பார்வதிபூசை பத்தியாய்ச்செய்வோர்கள்
வைகுண்டநாதருக்கு வழியடிமைசெய்தவர்கள்
நன்மைசெய்தவர்மேல் நாடாதேயென்றுசொல்லி
இவ்வளவுபேரும் இன்பமுடனென்னிடத்தில்
கொண்டுவரவேணுமென்று கூறியேயின்புசொல்வார்
யேமனையெழுப்பி யின்பமுடன்மகிழ்ந்து
கூப்பிடுங்களென்றுசொல்லி கோமான்விடைகொடுக்க
அருளளிப்பாயென்றுசொல்லி அந்தகனைத்தானெழுப்பத்
தண்டாயுதத்தோடே யெழுந்தானியமனுந்தான்
வாய்புதைத்துக்கொண்டனிட்டு வணங்குகிறான்தானியமன்
அப்போதரனுர் அகமகிழ்ந்துபார்த்தவனை
நன்மைகள்செய்தவர்மேல் நாடாதேயென்றுசொல்லி
ஆயுதங்களெல்லாம் அன்பாகத்தான்கொடுத்துத்
தன்மக்கனைக்கொழுந்தைத் தான்வந்தவுத்தமனை
நன்மைதன்மையுள்ளபடி நமனுருமேதானிருந்து
வாக்குடனேசொல்லுமென்று மகிழ்ந்துமேதானுரைத்தார்
இருபேருமொன்றாய் எல்லோரையுமனுப்பி
எமலோகபட்டணத்தைச் சேருகிறாரிருபேரும்
பட்டைகள்மிகநெருங்கப் பாரக்கடாயேறி
வெற்றிக்குடைபிடிக்க வெண்சாமரைபோடக்
கணக்கருநல்ல கற்பகத்தேரேறி
இயமதர்மன்கூட இசைந்துவந்தாருத்தமனர்
எட்டுத்திசையு மெங்குமேதான்முழங்க
திக்குதிசைகளெல்லாஞ் சிறப்பானபந்தலிலே
கவிவாணர்பாடக் கட்டியர்களாடிவர
நாடகசாலைப்பெண்கள் நாட்டியங்களாடிவர
பதினெட்டுவாத்தியங்கள் பண்பாகத்தான்முழங்க
வாசங்கள்தான்வீச வான்கவரிதான்வீச
பொன்னுலகத்தாரும் போதவேசூழ்ந்துவரத்
தேவாதிகளெல்லாஞ் சிறப்புடனேதான்வரவே
இந்தப்படியே யிருபேரும்வந்திருந்தார்

புட்பமாரிபொழிந்து பொன்னுலகோர்வாழ்த்திட
வானும்புவியு மற்றுலகிலுள்ளதெல்லாம்
நன்மையுந்தின்மையு நன்றாய்க்கணக்கெழுதி
எமதருமன்மாளிகையில் இருக்கின்றார்கணக்கர்
நான்குவாசல்வழிக்கு நடுவீதியோர்மாளிகையில்
சித்திரபுத்திரருஞ் சிறப்பாகத்தானிருந்து
பட்டோலைதனிலைப் பதிவாகவாசிக்கார்
திருந்தவேநன்மைசெய்தோர் சேர்ந்தவழிவருவதற்கு
வடக்குவாசல்வழிதனை வரிசையாய்ச்செய்யலுற்றார்
மாணிக்கஞ்சேர்த்த வயிரக்கால்தானாட்டி
இடம்பெறவேபாதல் வழிச்சாவணமபோட்டு
மாடங்கள்கட்டி வயிரவிளக்கேற்றி
கூடங்கள்கட்டிக் குளிர்ந்தமலர்க்காவுடனே
நல்லதண்ணீர்ப்பந்தல்களை நன்றாகவுண்டுபண்ணி
புண்ணியஞ்செய்வதற்குப் பொருத்தமிகவுண்டாக
அதுக்காணவேபேரை யவ்வழிக்குக்காவல்வைத்து
இதுதான்கயிலைவழி யென்றுமேபுண்ணியர்க்கு
சொல்லும்படிக்குச் சுருதியுள்ளகாவலரைத்
திட்டங்கள்செய்து சிறப்புடனேவைத்தார்காண்
கீழ்வாசல்தன்னருகே கேசவனைத்தானினைக்கி
ஞானநிஷ்டைசெய்தவர்கள் நல்லவழிவருவதற்கு.
சிவஞானபத்தர் தெரிசிக்கவருவதற்கு
பராசத்திபத்தர்கள் பண்பாயிருப்பதற்கு
மண்டபமுஞ்சோலையும் வகையுடனேதான்வைத்து
மாளிகைகூடம வகுப்பாகச்செய்யலுற்றார்
வெள்ளிக்கதவுமிட்டு வேதியரைக்காவல்வைத்து
வைகுண்டநாதருக்கு வழியடிமைசெய்தவர்கள்
வருகிறவழியென்று வைத்தாரேஅதுவரை
வேறுமொருவாசல் விரைவாகவகுக்கவென்று
வந்துதெற்குவாசல் வழிதோறுமுட்பரப்பி
நெருப்புப்பரந்தெங்கும் நின்றெறியவுண்டுபண்ணி
சுண்ணாம்புஞ்சேறுஞ் சுடுமணலுமுண்டாக்கி
பேய்நரியவேட்டிப் பெருங்கழுக்கள்தானாட்டி
கூரைப்பறங்காவுங் குளிர்ந்தநிழலில்லாமல்
நாயும்நரியும் பெருங்கடுவாயோநாயும்
கட்டெறும்புகொட்டுந்தேள் கடியதொருபாம்புடனே
அட்டைப்புழுக்குழியு மரணபுழுக்குழியும்
நரகக்குழியும் நன்றாகஉண்டாக்கி
அரியதொருபாதகரை யடித்திழுத்துவரச்சொன்னார்
கல்லுங்கரடுங் கடியமணல்பரப்பி

பாதகரைத்தெண்டிக்கப் பாவிகளைக்காவல்வைத்தார்
மேற்சேரொருவராகச் விதவிதமாய்ச்செய்யும்வகை
பார்க்கப்பயங்காட்டும் படர்பூசப்பிசாசுகளும்
கருநாயுஞ்செந்நாயுங் கலந்துகட்டிநிறுத்திவைத்தார்
குரைக்குந்தலைப்பேய்கள் கூட்டமாய்நிறுத்திவைத்தார்
செக்குலக்கைகலத்திருகைச் சிறப்பாகவுமுடன்னி
செப்புத்தூணாட்டியதிற் றீமொழியநிறுத்திவைத்தார்
இரும்பாலேதூண்டில்களை யெங்குமேநாட்டி
நிகரில்லாத்துறைதனிலே நெருப்பெரியச்செம்புருக்கி
பஞ்சமாபாதகர்க்குப் பரப்பியசெம்புவைத்தார்
இங்கில்யரங்கே கெட்டியாய்க்காவல்வைத்தார்
இப்படியேவாசல்க ளெல்லாம்வகுத்தபின்பு
செப்பமுடனிருபேருஞ் சிறப்பாகத்தானிருந்தார்
இங்கிதங்கள்பேசி யிருபேருந்தான்மகிழ்ந்து
வள்ளுவனுக்காள்விட்டு வரவழைத்தாரந்நேரம்
வள்ளுவனும்வந்து வலமாகவந்துநின்று
அடியேனையிங்கே யழைத்ததேதுக்கெனவே
படியேழுஞ்சென்று பறையடிக்கவிங்களு
சீவசெந்துக்களெல்லாம் சிறப்பாகத்தானறிய
காயிருக்கப்பழமுதிரும் படியடியேமரணை
அடித்துவாவென்றுசொல்லி யனுப்பினாரந்நேரம்
அப்படியேவள்ளுவனும் யானைதனைக்கொண்டுவந்து
ஆனைக்குள்ளவரிசைகளை யன்பாயலங்கரித்து
ஆபரணமுள்ளதெல்லாம் அழகாகவேபூட்டி
தப்பட்டம்வைத்துத் தனிக்கால்வழியேதான்
ஆனைதனிலேறியே புறப்பட்டானப்போது
துர்க்கைதிருக்கோயில் தூரவேதான்றெரிய
துய்யசரிவிட்டிறங்கித் துர்க்கையைத்தான்பணிந்தான்
மதுவுதனைக்கொடுத்தாள் பாகாளியப்போது
அரக்குமதுவு மளவின்றித்தான்குடித்தான்
பதினாலுலகறியப் பறையறைந்துசொல்லுகிறான்
ஆண்சாதிபெண்சாதி ஆதியேதான்பிறந்த
நாலுவகைச்சாதிகளும் நன்றாகத்தான்றெரிந்து
பழமுதிரக்காயிருக்க வென்றுசொல்லிப்பண்புடனே
வெய்யபெருந்தோளான் வீதியிலேவந்துநின்று
முறையிட்டுத்தான்பறையு முழக்கினானப்போது
இந்தமொழிகேட்டுடனே யெல்லாருந்தான்மகிழ்ந்து
அந்நேரஞ்சிறுபிள்ளைக ளனேகம்பேர்தான்கூடி
இரைச்சலிட்டுக்கொண்டு எதிராகநின்றதுவே
அப்போதுவள்ளுவனு மானைதனைநோக்கி

அடித்தானேபிள்ளைகள்மே லானவொருகோபத்தால்
அப்போதுபிள்ளைகளுக் கதிககோபமுண்டாயி
கையில்மணலெடுத்துக் காற்றிலேதூற்றிவிட்டார்
கண்ணில்மணல்விழுந்து கசக்கியேவள்ளுவனும்
கோபம்பெரிதாகிக் குணக்கேடாச்சொல்லிவிட்டான்
குடித்தவெறியாற் குணந்தப்பிசொல்லிவிட்டான்
பூவுதிரப்பிஞ்சுதிரப் பெருக்கெனவேபொட்டுதிர்க்
காயும்பழமும் கலந்துதிரவேயுறுமென்று
இனம்பிறப்பாராயிரம்பேர் தினம்பிறப்பாராயிரம்பேர்
கனமிருந்திபேருமற் றாணிப்பாரங்குறைய
என்றமதுகுடித்த வெறியாலிரங்காது
அடிடாஅடியென்று அடித்தான்பெருமுரசை
அப்படியேதானடித்து அவ்விடத்தைவிட்டேகி
சித்திரபுத்திரர்பாற் சென்றேயடிபணிந்தான்
அந்தக்கொடும்பறைகேட் டவ்விடத்திலுள்ளவர்கள்
இந்தவகையேதென்றே யெழுந்துமேதான்பிறகே
எல்லாருமொன்றா யெமலோகம்போய்புகுந்தார்
நல்லதர்மராசனையும் நற்கணக்குநாதரையும்
வந்துமிகப்பணிந்து வள்ளுவனங்குவந்து
மன்னவரேநீங்கள்சொன்ன மாற்றத்தைவிட்டுவிட்டு
கருங்குறிஞ்சிப்பூமுதலுங் கருத்தரித்தபின்முதலும்
வடுப்பிஞ்சுகாயுதிர வென்றுரைத்தேவள்ளுவனும்
ஏற்றதொருபறையடித்தா னெல்லோருந்தான்கேட்க
என்றுதொழுதுசொன்னா ரிருபேருந்தான்பார்த்து
அந்நேரமவர்களுக் கதிகோபமுண்டாயி
சொன்னமொழியொன்றிருக்கச் சொற்றவறியடித்தவனை
கோபம்பெரிதாகிக் கூட்டிவரச்சொன்னார்கள்
வந்துமேவள்ளுவனு மலரடியைப்போற்றிசெய்ய
வாராய்நீவள்ளுவனே வாய்மதங்களேதுரைத்தாய்
அப்போதுவள்ளுவனு மடிபணிந்தங்கேதுரைப்பான்
இப்போதுவந்தகுறை யென்னாலேவந்ததல்ல
அரக்குமதுமாகாளி யம்மைமிகவார்த்தாள்
அரக்குவெறியால் முழக்கினேனம்முரசை
பிள்ளைகள்துர்ச்சனர் பிழைகேடாய்ச்சொல்லிவிட்டேன்
இந்தப்பிழையைப் பொறுத்தருளவேணுமையா

குடித்தவெறியால் குணங்கப்பிச்சொல்லிவிட்டேன்
உள்ளமொழிசொன்னதெல்லா முறுதியாமென்றுசொல்ல
மாய்கையதுசொன்ன வள்ளுவனைத்தான்பார்த்து
சாராயந்தான்குடித்தான் தவறுவந்துவிட்டதினல்
வள்ளுவனைசொல்ல வகையேதுமில்லையென்றார்
பிள்ளைகளாலே பிழைகேடுவந்ததென்றாள்
வள்ளுவன்றானென்செய்வான் மற்றபேரேதுசெய்வார்
வள்ளுவன்சொற்படியே மானிடவரெல்லோரும்
வாழ்வுபெறவேவாழ்ந்து மகிழ்ந்திருங்கள்புவிமீதில்
என்றேயெமனர் இன்பமாய்த்தானுரைத்தார்
பூலோகத்திலுள்ள புகழ்ந்தமனுவையெல்லாம்
அவரவரிடத்தில் ஏகினரப்போது
இருந்தாரிருவருந்தான் இரத்தினமணிமண்டபத்தில்
மணிமுடியைத்தான்சூட்டி வன்மையுடன்தானிருந்து
பட்டோலைகள் தன்னைப் பரிந்துமிகவாசிக்க
அப்போதுசெட்டிச்சியம்மையொருசீமாட்டி
அமராவதிப்பெருமாள் அன்னைபோற்காத்தளிப்பாள்
தர்மராஜாவின்தேவி தான்செய்தபுண்ணியங்கள்
அழகியபுத்தகத்தில் அகப்படவேயப்போது
இயமனாதன்னிடத்தி லியல்பாகவாசித்தார்
இந்தவிபரம் இனிமேல்விளம்புகிறேன்
இக்கதையைக்கேட்டவர்க ளிராசர்பதம்பெறுவார்
நன்றிப்பெருங்கதையை நாள்தோறும்படிப்பவர்கள்
பாடிப்படித்திடவே பத்தியுடன்கேட்டவர்கள்
நாடியெழுதினவர் நல்விபதந்தானெடுத்தோர்
கற்றவரெல்லாம் களிப்பாய்ப்படிப்பதற்கு
ஸ்ரீபத்மநாபவிலாச அச்சியந்திரசாலைதனில்
நலமாகஅச்சிட்ட இட்டாபார்த்தசாரதிநாயுடவர்கள்
பலமாகப்பெருஞ்செல்வம் படைத்துமேவாழ்ந்திருப்பார்
ஆல்போல்தழைத்து அருகுபோல்வேரூன்றி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழியவே.

சித்திரபுத்திர நயினர் கதை
முற்றுப்பெற்றது.



உ

பராபரந்துணை.

# அமராவதிகதை.

செட்டியம்மையென்றே சீமாட்டிதன்கதையை
காரணத்தால்நான்பாடக் கணபதியேமுன்னருள்வாய்
தர்மராசாவின் தயவானதேவியப்பாள்
அமராவதியென்ற அழகானநற்பெயராள்
பூதலத்திற்செல்வம் பெருகமிகவுண்டாகி
மட்டில்லாச்செல்வம் வளர்ந்துமிகவுண்டாகி
அன்னைசுற்றத்துடனே பெரும்பேறுபெறதான்வாழ்ந்து
முத்தொட்டில்கட்டி முடியும்வாழ்வுண்டாக்கித்
தருமங்கள்தாமே தவறாமல்செய்துவந்தாள்
பாவங்களொன்றுசற்றும் பக்கத்திலேகேட்டறியேன்
இந்தப்படியே யியல்புடனே தான்வாழ்ந்தாள்
நயினார்தனிக்கான்ப நாவிலெழுத்தறியாள்
கணக்கரென்றசெய்தி கனவிலுங்கேட்டறியாள்
முப்பாலுங்காச்சி முடியாமல்வாழுகின்றாள்
சிவஸ்தலம்விஷ்ணுஸ்தலம் தெரிசனங்கள்செய்தறியாள்
சித்திரபுத்திரர்நோன்பு சிந்தையிலேவைத்தறியாள்
இவள்செய்திதன்னை இயல்சனக்கர்தாமறிந்து
எமதருமராஜனுட வின்பமாய்த்தானுரைக்க
அவள்தருமநற்கணக்கை யறுவளவுந்தப்பாமல்
கேட்டறியமருந்தான் கிருபையுடனேயிருந்து
அவள்செய்தபுண்ணியங்க ளடைவாகச்சொல்லுகிறார்
பட்டணமெல்லாம் பறைதட்டியாராய்ந்து
அன்னக்கொடிகட்டி யமுதுபடைத்திடுவாள்
அதிதிபரதேசிபத்தும் ஆருமற்றார்தங்களுக்கும்
ஆராய்ந்துதேடி யமுதமிகக்கொடுப்பாள
அத்தாலங்கேட்டவர்க்கு அமுதமேதான்கொடுப்பாள்
மகேசுரபூசைமுதல் மனமகிழ்ந்துசெய்திடுவாள்
கோட்டைக்குத்தண்ணீர் குளிர்ச்சிமிகவுண்டாக்கிப்
பாணக்கம்நீர்மோர் பதிவாகச்செய்துவைத்தாள்
சித்திரைமாதத்திற் செழிப்புடனேநற்குடையும்
விசிறியுந்தான்கொடுத்து வெப்பங்கள்தணித்திடுவாள்
கன்னிகாதானங் கருதிமுடித்துவைப்பாள்
வேதியர்க்குள்ளதெல்லாம் விரும்பியேகொடுத்திடுவாள்
ஆடையில்லாபேர்களுக்கு ஆடைமிகக்கொடுத்திடுவாள்
சனிவாரமெண்ணெய் தப்பாமற்கொடுத்துவந்தாள்
நந்தவனமுண்டாக்கி நற்பூக்கள்தான்பறித்து

ஆலயங்கள் தன்னி லடைவாகச்சாத்துமென்றாள்
தூரத்துக்குதூரஞ் சுமைத்தாங்கிகட்டிவைத்தாள்
காதத்துக்குகாதங் கற்கிணறுகட்டிவைத்தாள்
பிள்ளைபாற்றின் பண்டம் பெருக்கவேதான்கொடுப்பாள்
வெட்டுந்தலையைப் பொருள்கொடுத்துமீட்டிடுவாள்
வட்டியில்லாமற்கொடுத்து வாங்கிமிகனைத்திடுவாள்
வேந்தனுக்குஅஞ்சி விரும்பிவருமவர்க்கு
தேருதலைச்சொல்லி படைக்கலங்கள்தான்கொடுப்பாள்
அன்னங்கள்குத்திக் களவுசெய்யவருபவர்க்கு
அஞ்சாதேபோவென்று ஆதரவுசொல்லிடுவாள்
ஏழைபரதேசியர்க்கு இல்லிடமும்கட்டிவைத்தாள்
இடிந்தமடமுதலாய் எடுத்துமேபுதுப்பித்துப்
பூப்பியர்கள்போட்டுப் புறக்கனிகள்தான்கொடுப்பாள்
அறுதிப்பிணத்தை யடக்கிவைப்பாளகண்டீரே
ஆயிரங்கே ட்டையரிசி அன்றைக்கன்றுசொல்லிடுவாள்
அதற்கானகாய்கறியு மப்படியேதான்கொடுப்பாள்
சம்பாரஞ்செல்லுமதை தடையறவேதான்கொடுப்பாள்
இந்தப்படிதரும மெவ்வளவிந்தபாமல்
செய்துமேதானுஞ் சிறப்பாகத்தானிருக்க
விரதமும்நோன்பும் விரும்பித்தபாமியென்று
கணக்கருமங்கே கடுங்கோபமுண்டாகி
என்னதானஞ்செய்தாலு மேற்றிழையாள்தன்னைவிடோம்
பூமிதனிலிருந்து பொருந்தியேவாழாமல்
அதற்கானபடிசெய்ய அழைப்பிக்கவேணுமென்று
கணக்கருக்குக்கைக்கூலி கட்டுவாருலகமதில்
இந்தவசனமதை யெவ்வளவுமறியாமல்
இருந்த அமராவதியை யிங்கழைக்கவேணுமென்று
எவினுர்தூதுவரை யின்னமொருவார்த்தைசொல்வார்
அவளுடையவாசலடையாளங்கேட்டீரோ
தென்னமரங்களுஞ் சேரவேசூழ்ந்திருக்கும்
கப்பல்படகுமுதல் கரையருகேவந்திருக்கும்
திவுகளிலுள்ளதுகள் சேகரமாய்வந்திருக்கும்
பசுக்கள்ஒருகோடிநிற்கும் பைங்கொடியாள்வாசலிலே
அரதேசிபரதேசிக் கன்னம்வழங்கிடுவாள்
என்றுசொல்லிமற்கணக்கர் எவினுர்தூதுவரை
அந்நேரந்தூதுவரை அதிககோபமுண்டாகி
இருப்புதடியுடனே யேற்றதோராயிரமும்
பாசக்கயிறும் பெருவலையுந்தானெடுத்து
வந்துவளைந்தார்கள் மனைபாட்டிவாசலிலே
வாசலிலேவந்துநின்று வளமையெல்லாங்கண்டார்கள்

என்னைப்புகொண்டா னெந்தனையும்பிள்ளையாயல்
பூதலத்திற்செல்வம் புகழ்பெறவேதானிருந்து
தனிக்குறும்புசெய்துகொண்டு தரணியிலிருப்பவனை
இந்நேரமிக்கேயழைத்துவாவென்றுசொன்னார்
என்றுசொல்லித்தூதுவரையேவல்பார்த்தனுப்ப
அந்நேரந்தூதுவர்கள் அதிகோபமுண்டாகி
இருப்புக்கையெடுத்தார் பெற்றதொருசிங்கிலியர்
வந்துவளைத்தார்கள் வாழ்வரசிவாசலிலே
நந்தவனம்வைத்து நறும்பூப்பறிக்கிறதும்
அன்னங்கொடுத்து ஆதரவுசொல்லுவதும
சத்திரங்கள்வைத்து தய்யாகநடக்கிறதும்
தருமங்களெல்லாந் தவறாமல்செய்கிறதும்
கண்டார்கள்சிங்கிலியர் கவலைமெத்தவுண்டாகி
கைவிற்றடியைக் கடக்கவிட்டேறிந்து
தலையிலேகையைவைத்துச் சலிப்பாயிருக்கையிலே
அந்நேரமங்குவந்தாள் அமராவதியாளும்
வாருங்கள்மக்களே வாடியிருப்பானேன
அமுதுகொள்ளயாருமென் றழைத்தாளேயப்போது
பானக்கம்வாங்கிப் பரியாறக்குடித்தார்கள்
இப்போதிவளை யழைத்தேபோனோக்கால்
தருமங்களெல்லாந் தவறிவிடுமென்றுசொல்லி
எதுகுறையென்று எகினார்சிங்கிலியர்
சித்திரபுத்திரரே சீமானேகேளுமையா
எங்களையும்நீங்கள் என்னபடிசெய்தாலும்
செட்டிச்சியைக்கூட்டி வரமாட்டோமென்றுசொன்னார்
அந்நேரமக்கணக்க ரதிகோபமுண்டாகி
உங்களுக்குக்கைக்கூலி கட்டிமுனுதாரி
பானக்கம்வாங்கிப் பதிவாய்க்குடித்தீர்கள்
இதற்கோயனுப்பிவைத்தே னென்றாரேயுத்தமனார்
அதையுங்கணக்கெழுதிக் கொண்டாரேயுத்தமனார்
சினத்துமிகவுரைத்துச் சீறியப்போது
மற்றுமொருதூதுவரை வரவழைத்தாரந்நேரம்
பெற்றதாயைக்கொன்ற பெரும்பாவிமொட்டையனைக்
கொண்டகணவனைக் கொன்றகொலைப்பிராமணியை
இவர்கள்தன்னையழைத்து யேவினார்கணக்கர்
அரைநாழிகைப்பொழுதி லழைத்தோடிவாருமென்றார்
அந்நேரமொட்டையனு மானபிராமணியும்
ஆயுதங்கள்தானெடுத்து அடைந்தாரிருவருந்தான்
வந்துதலைப்பட்டார்கள் வாழ்வரசிவாசலிலே
மனையிலொருபுறத்தே மறைந்திருந்தார்கள்
தானதருமங்கள் தயவாய்நடக்கிறதை

இத்தனையுங்கண்டு எடுத்துரைத்தான்மொட்டையனும்
இவளைத்தான தருமம் மினிதாகச்செய்தாலும்
பிறருரைத்தபடி நாலவிடுவதில்லையென்றான்
என்றுசொல்மொட்டையனு மிருகண்ணுவந்தான்பிற
அங்கேரமேந்தானும் அமராவதியாளும்
தீர்த்தமுமாடித் தெருவிதிவருகையிலே
பூனையாய்வந்து குறுக்கிட்டான்மொட்டையனும்
அப்போதுசெட்டிச்சி யமனைக்கவலையுற்று
துக்கமுண்டாகித் துடித்துதேயலதுகளும்
மயக்கமிறந்து மதிமறந்து அந்நேரம்
ஏதோகொடுமை யினிகேட்கவேணுமென்று
பூனைகுறுக்கிடவும் போக்ககூறல்லவென்று
தருமங்கள்செய்வதிலே தப்பிதமுண்டாச்சோ
என்றுசொல்லியம்மை பெற்றதொருபாத்திரத்தில்
அமுதுகறிகளை யப்போதுதானெடுத்துச்
செயகண்டியடித்துத் தெருவெல்லாந்தான்திரிந்து
ஆராய்ந்துதேடி யமுதுகொடுத்திடவே
திட்டசட்டமாகச் செய்வித்தாளந்நேரம்
ஒன்றுந்தவறாமல் உள்ளபடியேநடத்தி
வந்தாளரண்மனையில் வாழ்வரசிதானுமப்போ
இருக்கும்பதியில் இவள்பாகத்தானிருந்து
பெத்திமார்பூட்டிமார் பிரியமுடனேயிருந்து
ப்பாலோடுநெய்யும் பதிவாயமுதருந்திச்
சாந்துபுனுகுஞ் சவ்வாதுமுதல்தானணிந்து
புஷ்பாதிகளெல்லாம் போதவேதான்சூடிச்
சந்தோஷமாகவே தானிருக்கும்வேளையிலே
கொல்லவந்தகூற்றுவனும் கோலப்பிராமணியும்
அவ்வேளைதான்பார்த்து அவள்கடையில்வந்தார்கள்
வாசற்படியில் வந்துநின்றாளந்நேரம்
கண்டமராவதியாளும் கர்மமோவென்றுசொல்லி
இத்தனைநேரமட்டும் இளைப்பாயிருந்தீரோ
இருபேருமீங்கள் இனியமுதுகொள்ளுமென்றாள்
சத்திரத்தில்வாருமென்று தான்விரும்பிச்சொன்னாளே
அப்போதுகூற்றுவனு மானபிராமணியும்
இந்நேரம்நாங்கள் அமுதுகொள்வதில்லையெனப்
பலகாரம்நான்தருவேன் பதிவாகக்கொள்ளுமென்றாள்
பலகாரம்நாங்கள் பொசிப்பதில்லையென்றார்கள்
எந்நேரத்திலிச்சையென்று எந்திழையாள்தான்கேட்கப்
பாலின்மேலாசையென்றான் பிராமணியுமப்போது
பாலும்பழமும் பரிவாகக்கொண்டுவந்தாள்
காய்ச்சினபால்நாங்கள் கண்ணுக்கொள்வதில்லைக்

கண்காணாப்பால்தான் கறந்துதாரேவேணுமென்றார்
இதுவுமொருசோதனையோ வென்றுமனதிலெண்ணி
ஆறாற்கறந்து அடைவாகத்தருமேயென்றாள்
அணைக்கயிறுங்கடைக்காலும் அன்பாகத்தானெடுத்து
காராவினண்டையிலே காரிகையாள்தான்வரவே
கொல்லவந்தகூற்றுவனும் குடுகுடெனஓடிவந்து
கொம்புதனிலேறி கொற்றவனுந்தானிருக்க
அதனைவென்றுதானும் அமராவதிவரவே
அப்போதுபசுவுக் கதிகோபமுண்டாக்க
காடிகழுநீர் கலந்துவைப்பதில்லையென்று
வைக்கலபிடுங்கி வாரியேயவைக்கயிலே
குத்தியெடுக்க கூறியகொம்பாலும்
இருந்தாள் அமராவதியுமிகக்கலங்கிக்
கதறத்தொடுத்தாளே காரிகையாள்நேரம்
ஏங்கியழுதாள் எட்டோலகந்தானறிய
தருமங்கள்செய்ததிலே தனக்கேதுவந்ததுண்டோ
பொல்லாதகாலமாய்ப் பூனைகுறுக்கிட்டவும்
துர்க்குறிகள்காட்டினதுஞ் சோதனையுமுண்டாச்சு
ஏதுகுறைகளுண்டோ என்னமோவென்றுசொல்லி
எண்ணுதனையெண்ணி யேங்கியுயிர்பிரிந்தாள்
கொல்லவந்தகூற்றுவனும் கோலப்பிராமணியும்
பாசக்கயிறும் பருவலையுந்தானெடுத்து
கட்டினாப்போது கண்மண்டைதான்பிதுங்க
இருப்புத்தடியால் இரக்கமற்றுந்தானடித்துப்
பாப்பாத்திகள்ளியவள் பாசககயிறுபிடித்து
அடித்தானேகூற்றுவனும் அமராவதியாளைக்
காமவல்லியென்றுமொரு காற்றுவந்துவீசிடவே
ஆகாரமின்றெனியு மதிகோபத்தோடேவந்து
இருப்புத்தடிமுறிந்து இறக்கவற்றார்தான்விழவே
பாசக்கயிறும் பருவலையுந்தான்தெறிக்க
அப்போதுகூற்றவனு மானபிராமணியுந்
திடுக்கிட்டுநின்று தமோறியந்நேரம்
இத்தனைக்குந்தருமங்கள் இனிதாகச்செய்தாளே
இவளைநாம்விட்டுவிட்டால் இயர்கணக்கரேதுசொல்வார்
கோபித்துக்கண்சிரிக் கொலைகளவிற்போட்டிடுவார்
எப்படியுந்தானிவளைக் கொண்டுமேபோவோமென்று
இருபேருமாக நினைந்துமேதான் நணிந்து
வலைக்கயிறுதானெடுத்து வரியவேதான்பூட்டிக்
கட்டியிழுத்தார்கள் காரிகையந்நேரம்
கண்கள்தெரித்துவிழக் கட்டியிழுத்தார்கள்
கொண்டுவந்துவிட்டார்கள் கொற்றவர்முன்பாசச்

உடனேவடமுறுக்கி யோடிவந்தார்வாணியருஞ்
செட்டிச்சியம்மைதனைச் செக்கிலேதான்போட்டு
ஆட்டவேணுமென்று அக்குவந்தாரந்நேரம்
செட்டிச்சியும்போ சிவனைநினைந்தழுதாள்
அப்போதொருகாற்று அவனிதனிலுண்டாகி
செக்குததகர்ந்தவுடன் செக்குலக்கைதான்முறிந்து
ஆனைகள்பட்டு அறுந்துவடந்தான்முறிந்து
ஓடிவேறுதுவர்க ளொருவருமேகாணாமல்
அந்நேரம்வாணியர்கள் அதிசெய்திகண்டவுடன்
வந்துமேசொல்லுகிறார் வாய்த்தகணக்கருடன்
ஆகாசக்காற்று அதிகோபமுண்டாகி
செக்குத்தகர்ந்து செக்குலக்கைதான்முறிந்து
வோடினார் துருவர்க ளொருவருமேதான்காணோம்
அமராவதியாளு மன்னம்போலவேயிருந்தாள்
கணக்கரிதைகேட்டவுடன் கண்களிரண்டுஞ்சிவந்து
அமராவதியாளை யழிநரகில்தள்ளுமென்றார்
நரகத்தைக்கண்டாளே நல்லதொருமாதும்
நரகத்திலேகிடந்த பாவியர்களெல்லோரும்
செட்டிச்சிபார்த்தவுடன் சிவலோகஞ்சேர்ந்தார்கள்
நரகக்குழிகளெல்லாம் நல்லகுழியாயினவே
அதையுமறிந்தாரே ஆனதொருநற்கணக்கர்
என்னையும்பின்னாக்கும் எதிர்க்கவென்றாரவன்தலையில்
விற்றுவரச்சொல்லி விடைகொடுத்தாரந்நேரம்
அந்நேரந்தூதர்கள் அவள்தலையிற்றனெடுத்து
ஏழுதெருவும் வியல்புடனேகூறிடவே
கொள்ளுவாருமில்லைக் கூப்பிடுவார்தானுமில்லை
பட்டணத்துள்ள பலபேர்களெல்லோரும்
புண்ணியவரைச்சற்றும் புகழ்ந்தறியாப்பாவியிட
பெண்ணையும்புண்ணாக்கு மினிவந்தகாலமென்று
செட்டிச்சியைக்கண்டவுடன் தெருக்கதவைதானடைத்தார்
தெருவுகளெல்லாஞ் சேரவேதானமர்ந்து
கழுத்துத்தெறிக்க கண்முண்டைதான்பிதுங்க
அமராவதியாளும் அனியாயமெனவழுதாள்
அய்யோதெய்வமே அரும்பாவஞ்செய்தேனே
இந்தவிதிகளெல்லாம் எனக்கோவரவேணும்
விதியைநினைத்தந்தணர் வீதியில்வந்தவுடன்
அதிலொருபிராமணியும் அந்நேரமோடிவந்து
என்னெணையும்பின்னாக்கும் இறக்குமென்றுளப்போது
அந்தக்ஷணமே பிரக்ஞையுளப்போது.
தண்ணீர்தவிக்குதென்றாள் தாமக்குழலாளும்
நீர்மோர்ப்பருக்கி நிறையவேகொண்டுவந்தார்

கொண்டுவந்தமோரை குடித்தாள்வழிநடமுட்ட
தாகந்தெளிந்து தகைதீர்ந்தாள்செட்டிச்சி
பிராமணியுமப்போ பெருத்தமொழியுரைத்தாள்
அமராவதியாள் அருகிருந்துகேட்கலுற்றாள்
அன்னமேதேனே யமராவதியாளே
நீயெத்தனைதருமம் நிலையாகச்செய்தாலும்
சித்திரபுத்திரரைச் சிந்தையில்லையாமல்
புண்ணியவானென்று புத்திதனில்லையாமல்
இயமதருமர்வாசலிலே யிருந்துக்கணக்கெழுதப்
பசுவினவயிற்றில் பாலகனாய்வந்தவரை
அவரைநினையாமல் அநியாயம்போனதென்ன
தருமங்களெல்லாம் தவிடுபொடியாக்கிடுவார்
அண்டபுவனமெல்லா மறிந்துகணக்கெழுதப்
புண்ணியனார்வந்து பிறந்ததறியாயோ
இத்தனைபாடுபட்டும் எள்ளளவுப்புத்தியில்லை
அவரைநினையாமல் அவதிப்பட்டாயே
அவர்நோன்பிருக்க அறிவிக்கவேணுமென்று
உன்றாலேதானு முலகெங்குந்தானறிய
கூட்டிவந்தேயுன்றனைக் கோறணிகள்செய்கின்றார்
என்றேபிராமணியும் எடுத்துரைத்தாளந்நேரம்
அமராவதியாட்கும் அறிவுமிகவுண்டாகி
சித்திரபுத்திரரே சிவனார்பெருங்கணக்கர்
பாவங்கள்புண்ணியங்கள் பகுத்தெழுதவந்தவரோ
காணாதகாட்சியெல்லாங் காட்டிவைத்தாரேமானும்
அவரைநினையாம லல்லலெல்லாம்பட்டேனே
அறியாமல்காணும் அவதியுற்றேனென்றுசொல்லி
மண்ணில்விழுந்து மலரடியைத்தெண்டனிட்டு
அறிவெனக்குவந்ததையா ஆனதொருபாலகரே
செய்தபிழைபொறுப்பீரென்று சொல்லியேதெண்டனிட்டார்
கணக்கருமப்போது கருணைமிகவுண்டாகி
சித்தந்திரும்பித் திருவாய்மலர்ந்தருளி
மெத்தமனமகிழ்ந்து வேகமெல்லாந்தான்தணிந்து
என்னைநினைந்ததினால் என்றனுடன்பிறப்பும்
இவளுக்குநற்பலனும் இனிகொடுப்போமென்றுசொல்லி
ஸ்நானங்கள்பண்ணிவரத் தாமேயனுப்பினர்காண்
ஸ்நானங்கள்செய்து தவக்குறையுந்தான்முடித்து
சிவனைநினைந்து திருநீறுந்தானணிந்து
சித்திரபுத்திரரே சீமானேயென்றுசொல்லி
கணக்கரிடத்திலே காரிகையாள்வந்துநின்றாள்
அந்நேரமுங்கணக்கர் ஆனையவரவழைத்து

திருமஞ்சனங்கொண்டுவந்து சிறக்கவேதான்சொரிந்து
பட்டுமுதலுள்ளதெல்லாம் பண்பாகத்தான்கொடுத்தார்
ஆபரணமெல்லா மழகாகத்தான்கொடுத்தார்
எல்லாப்பதமு மினிமையாயத்தான்கொடுத்தார்
அந்நேரமேதானும் அமராவதியாளும்
தருமத்தையெல்லாஞ்சீரன் தவறாமலேசெய்திடவும்
எண்ணியிருந்துவந்து இடறுகள்செய்வானென்
வகைவிபரமாக வசனிக்கவேணுமென்றாள்
அப்போதுசற்கணக்கர் அறிவித்தாருசமிக்ஞ.
உன்னாலேயென்பே ருலகமெல்லாந்தானறிய
செய்திவைத்தேனுத்தமியே செய்திமிழைபொறுப்பாய்
என்றேனென்றிருந்தவர்கள் இகபரங்கள்தானடைவார்
இந்தவிரதம் எடுத்திராபாவியர்க்கு
கிட்டதெண்டனைகள் கிலயாகததானடைக்கும்
அப்படிக்குவாராமல் உன்னையழைத்துவந்தோம்
உன்னாலேமோட்ச மடையவென்றேயுன்னைநான்
கூட்டிவந்ததென்றவுடன் கொம்பனையாள்கேட்டிடுவாள்
அறிவித்தால்நானு மப்படியேநடப்பேனென
சொல்லுகிறேன்கேளாய் சுகமானவென்பிறப்பே
சித்திரமாசம் பதினெட்டாந்தேதியிலே
சித்திரைக்குச்சித்திரையில் சிறாப்பவுர்ணையில்
பூதலத்திலுள்ள புகழ்தமனுச்செந்துவெல்லாம்
ஆண்பெண்ணுடனே யடைவாகநோன்பிருந்து
ஆறுகுளந்திலே யன்பாகத்தான்முழுகி
திருநீறணிந்து சிவனையேவணங்கி
சூரியநமஸ்காரந் தெண்டமிகவணங்கி
புதுப்பணிகளெல்லாம் பூட்டியலங்கரித்து
சாந்தாற்றரைமெழுகிச் சந்தனத்தால்கோலமிட்டு
வாழைக்கரும்பு வான்கமுகுந்தானிறைத்து
பழக்குலைகளாலே பந்தற்கால்தானிறுத்தி
மஞ்சள்குலையும் மாங்குலையுந்தான் தூக்கி
பலகைதனைபோட்டுப் பாவாடைமேல்விரித்து
வேழமுகத்து விநாயகனைமுன்புவைத்து
பூரணகும்பம்வைத்துப் பொன்னின்விளக்கேற்றி
நிறைநாழிவைத்து நிறைமறக்கால்தானும்வைத்து
அடைக்காயும்வெள்ளிலையும் அன்புடனேதான்படைத்து
கடலைதுவரைமுதல் காராமணிபயறும்
பயறுவகையுள்ளதெல்லாம்பாங்குடனேதான்படைத்து
பலகாரவகைகள் பாங்காகச்செய்துவைத்து
பருப்பரிசிபானக்க பாங்குடனேதானும்வைத்து
பொன்னின்எழுத்தாணியுடன் புத்தகமுங்கூடவைத்து

உப்புமுதற்கற்பூர முள்ளதெல்லாந்தான்படைத்து
எள்ளுபருத்தி பெற்றதொருமுத்துக்களும்
இத்தனையுமன்று யியல்பாகவைத்தபின்பு
புதுப்பானைதன்னிலே பொங்கலிட்டுயிறக்கி
திருக்கண்ணமுதஞ் சேகரமாய்வைத்திறக்கி
புத்துருக்குநெய்யும் பொரிக்கறியும்பாற்குழம்பும்
கறிவகைகளுள்ளதையுங் கட்டாகத்தான்படைத்து
தயிருமுறைத்துவைத்துச் சகலகறிவர்க்கமுடன்
சேமவிட்டையாக நைவேத்தியஞ்செய்து
அரகராவென்று அடிபணிந்துதெண்டனிட்டு
தூபப்புகைகாட்டித் தோத்திரங்கள்செய்துநன்றாய்
சூடன்பணிமாறிக் குழக்குலவையிட்டு
வாத்தியங்களெல்லாம் வகைவகையாய்த்தான்முழங்க
ஆண்டவரேயென்று அடிபணிந்துதெண்டனிட்டு
ஆசாரியர்கன்னையன்புடனேகூட்டிவந்து
கட்டாகநன்றாய்க் கதைகள்படிக்கவைத்து
இன்பமாய்த்தானிருந்து இக்கதையைத்தான்கேட்டுக்
கேட்டுமுடிந்தபின்பு கிருபைவரத்தெண்டனிட்டு
இப்படியேநோன்பு இயல்பாயிருந்தவர்க்கு
இந்தக்கதையை யெழுதிப்படித்தோர்க்கும்
எல்லாப்பதமுங் கொடுப்போமநாமென்றிறைமையே
புத்திரசம்பத்தும் புண்ணியமுமுண்டாகும்
மங்கிலியம்வாழ்ந்து மக்கள்தழைத்திருப்பார்
இந்தப்படியேநோன்பு எல்லோருந்தானிருக்க
பூலோகமெல்லாம் புகழ்ந்துபறைசாற்றிடென்று
இந்தப்படிகணக்க ரியல்பாயுரைத்திடவே
நயினாருரைத்தபடி நன்றாய்க்கருத்தில்வைத்து
தப்பாமல்நோன்பிருந்து தவம்பெறுவோமுத்தமரே
சித்திரபுத்திரரே சீமானேநீர்கேளீர்
உயிரோடேசொர்க்கம் வரவழைத்துக்கொண்டாக்கால்
இப்போதேயென்னை யிங்கேவரவழைத்தால்
என்தர்மமெல்லாந் தவிர்ந்துவிடுமென்றுசொல்ல
சித்திரபுத்திரர்க்குச் சிந்தைமிகவுண்டாகி
பூலோகத்திற்போய் பெருங்கவேதான்வந்து
தருமங்களெல்லாம் தப்பாமற்செய்பவும்
போகவிடைகொடுப்போம் பொற்கொடியேகேளென்றான்
நூறுவயதிருப்பாய் நூறாண்டுசென்றபின்பு
உன்னையுங்காணு முடனழைத்துக்கொள்ளுகிறேன்
ஆனதினால்நீயு மாக்கையழியுமுன்னே
பூந்தேரிலேறிப் போய்வாருமென்றுசொல்ல
அப்படியேதேரேறி அமராவதிவருமுன்

அந்நாட்க்கு மதிசயத்தைக்கேளுமினி
கூரியகொம்பதினல் கொன்றைபசுததாலும்
இரையமருந்தாமல் இலைக்கோதிக்கூட்டாமல்
கண்ணீரொழுகக் கதறுதேசப்பசுவும்
அமராவதியாளென் அன்னைபிறந்தாளென்று
ஊராருறவுள்ளா ருற்றார்கள்தான்கூடி
கூப்பிட்டழுது கோவிந்தாவென்றிடவே
ஆண்டிபரதேசி அனியாயமென்பதுவே
அமராவதிகட்டை யன்பாகத்தானமுடித்து
மஞ்சளையும்பூசி மலர்களுந்தான்சூட்டி
பட்டுமுடுத்திப் பாவாடைமேற்போட்டு
மாலைக்கழுத்திலிட்டு மருககொழுந்துதானணிந்தார்
பூந்தேருங்கட்டிப் புட்பமலங்கரித்து
வாத்தியங்களெல்லாம் வரிசையாய்த்தான்முழங்கி
குழலைதனைமுழங்கிக் கோவிந்தாவென்றுசொல்லி
அமராவதிகட்டை யானதொருபூந்தேரில்
வைத்துமேதானெடுத்து வானமெல்லாந்தான்முழங்கி
மயானக்கரையில் வகைவகையாய்ப்பந்தலிட்டு
சந்தனக்கட்டை சதிராகத்தானடுக்கி
கருமங்கள்செய்தார்கள் காரிகைக்குமப்போது
கொள்ளிகள்வைத்து குடமுமுடைத்தார்கள்
இந்தபபடியாக யிருக்குமந்தத்தருவாயில்
வாய்க்கரிசிபோட்டார்கள் வந்தவர்களெல்லோரும்
அமராவதியாளை அனுப்பினரந்நேரம்
மயானத்துறைக்கு வந்தாளேதேரோடும்
கட்டையிலேயிட்ட கனத்தவுடல்புகுந்தவுடன்
செட்டிச்சியார்தனக்குச் சிவன்பிறக்கதுவே
நித்திரைதெளிந்ததுபோல் நினைவுமிகவுண்டாகி
சிவசிவாவென்று சிவனைமிகத்தொழுதாள்
திசைநோக்கிதானும் தெண்டனிட்டாளுத்தமியும்
நன்மையுந்தின்மையும் நடுவெழுதவல்லவரே
காணாதகாட்சியெல்லாம் காட்டிவைத்தீர்சிமானே
படாதபாடெல்லாம் படுத்திவைத்தீர்சிமானே
இப்படிநினைந்து எகினளுத்தமியும்
அடுக்கினகட்டையெல்லாம் ஆல்போல்தளர்ந்திடவே
அமராவதியாள் அகத்திலேவந்தவுடன்
உற்றார்வுறவுடையார் ஊராரைக்கூட்டிவந்து
போசனம்பண்ணுவித்துப் போகவிடைகொடுத்தாள்
தருமங்களெல்லாந் தப்பாமல்செய்திடுவாள்
நயினார்தன்மேலன்பு நன்றாகவிருக்கவென்று
நாயனார்தம்மிடத்தில் நன்றுபதிவித்தாள்

தர்மராசாவுமப்போ தானுமிகப்பயந்து
ஸ்ரீபுருஷாள்தானுஞ் சிறக்கவேகோவமிருந்தார்
சித்திரைமாதம் பதினெட்டாந்தேதியிலே
சித்திரைக்குசித்திரையிற பிராய்ப்பவுபணையில்
பறையோசைகேட்டுப் பதம்பெற்றோமென்றுசொல்லிப்
பூலோகத்திலுள்ள புகழ்ச்சமனுடரெல்லாம்
நயினார்திருநோன்பு நன்றாகத்தானிருங்கள்
என்றுசொல்லிவள்ளுவனும் எடுத்துப்பறைசாற்றிடவே
பலகைதனைப்போட்டுப் பாவாடைமேல்விரித்து
நிறைநாழிவைத்து நிறைமரக்கால்தானும்வைத்து
தேங்காய்ப்பழமுஞ் சிறக்கவேதானும்வைத்து
சர்க்கரையெள்ளுருண்டை சகலபதார்த்தமுடன்
பருப்பரிசிபாணககம் பால்குடனேதான்படைத்துக்
கறிவகைகளுள்ளதெல்லாங் கட்டாகத்தான்படைத்துப்
பொங்கலுமிட்டுப் போதமிர படைத்துத்
திருக்கண்ணமுதுஞ் சேகரமாய்த்தானும்வைத்துப்
புத்துருக்குநெய்யும் போதவேதான்படைத்துத்
தூபதீபங்காட்டித் தோத்திரங்கள்தான்செய்து
தெண்டனிட்டுத்தான்பணிந்து திருநீறுந்தானணிந்து
ஏங்கிப்பரதவித்து இறக்குந்தறுவாயில்
உத்தமனார்தாமு முடனேயறிந்தார்காண்
இதற்கென்னசெய்வோமென்று ஏற்றபடிநினைந்தார்
பார்வதியாளிடத்திற் பண்பாகச்சொல்லவென்று
சித்திரபுத்திரருஞ் சிறப்பாகத்தானபார்த்து
எந்தன்பிறப்புவளர்ப் பெல்லோருந்தாமறிய
என்னோன்புகல்விரதம் எல்லோருந்தாமிருக்க
வேணுமென்றுநினைந்து மேன்மையுள்ளசெட்டிச்சி
அமராவதியாளை யன்புடையமாதரசை
வரவழைத்துநானும் வகைப்படிசொல்லிவிட்டேன்
சொன்னபடியவளும் தோத்திரங்கள்செய்துமிகப்
பூலோகத்துள்ள புகழ்ந்துமனுடர்க்குரைத்தாள்
விரதமிருந்து விஸ்தாரஞ்செய்துவைத்தாள்
எந்தன்பிறப்பை எடுத்துரைக்கயாருமில்லை
சிவனாருமப்போது சிந்தைமிகவுண்டாகிப்
பார்வதியம்மாளைப் பக்கத்திற்றானழைத்து
புத்திரநற்பிறப்பைப் பேரார்மிகநீயும்
பூலோகந்தானறியப் போய்ச்சொல்லுமென்றுரைத்தார்
பாப்பாத்திவேஷம் புகுந்தாளேபார்வதியும்
கையிற்பிறம்புங் கனத்ததொருபுத்தகமுந்
தானெடுத்துக்கொண்டு சதிராகவந்திருந்து
எதுக்குநீயும் இளைப்புடனேயிருக்கின்றாய்

என்னுடனே நீயும் உரைத்திடுவாயுத்தமியே
அமராவதியாள அறிவுமிகவுண்டாகி
நயினார்திருநோன்பு நாங்களிருக்கின்றோம்
அவருடையபிறப்பை யறிவிப்பாரில்லாமல்
தயங்குகிறோமென்றாள் தாமக்குழலாளும்
அப்போதுபிராமணியும் அவிழ்த்தாளேபுத்தகத்தைக்
கேளுங்களிக்கதையைக் கிருபையுடன்சொல்லுகிறேன்
நாட்டுக்கணக்கர் நமனார்பெருங்கணக்கர்
பூலோகத்துள்ள புகழ்ந்தமேனியர்க்கும்
நன்மையுந்தின்மையும் நடுவெழுதவேணுமென்று
எமதர்மர்வாசலிலே யிருந்துகணக்கெழுதுவதும்
பிறப்பும்வளர்ப்பும் பேரானநல்வளமும்
தவத்தாலேவந்தகதை தானேயுரைத்திடுவாள்
தவத்தருமைகண்டு சந்திரனும்வந்ததுவும்
பசுவின்வயற்றில் பாலன்பிறந்ததுவுஞ்
சம்புதலத்திற் றமையாயிருந்ததுவும்
எல்லாக்கதையும் எடுத்துரைத்தாள்பிராமணியும்
புத்தகமுந்தானும் பொன்னிவெழுத்தாணியுடன்
கேட்டார்களெல்லோருங் கிருபையுடனேயிருந்து
தெண்டனிட்டுத்தான்பணிந்து திருநீறுவாங்கிவிட்டார்
சாந்துசவ்வாது சந்தனமுந்தான்கொடுத்தார்
அடைக்காயும்வெள்ளிலையும் அன்புடனேதான்கொடுப்பார்
மங்கிசமுத்திலிட்டார் மண்டலமெல்லாமறிய
ஆபரணம்பூஷணமு மன்பாகத்தான்கொடுத்தார்
இப்படியேவரிசைபெற்று யேகினாள்பார்வதியும்
சிவனாரிடத்திற் சேர்ந்திருந்தாள்பார்வதியும்
புத்திரனாரிடத்திற் போனதொருசேதியெல்லாஞ்
சிவனாருங்கேட்கச் சிந்தைகளிகூர்ந்து
செப்பினாள்பார்வதியும் சேதியொன்றுந்தப்பாமல்
பூலோகந்தானறிய போனதெல்லாஞ்சொன்னவுடன்
இயமனிடம்வருவதற்கு யேற்றவிடைவாங்கி
புத்திரரும்வந்து புகழ்ந்துமேதானிருந்தார்
இந்தக்கதையை யின்பமாய்க்கேட்டவுடன்
அமராவதியாட்கு அறிவுமிகவுண்டாகிச்
செல்வங்களெல்லாம் சேரவேயுண்டாகி
நாளுக்குநாளதிகம் நன்றாயழைத்ததுகாண்

சேட்டபேரெல்லோருங் கிளைகளுடன்வாழ்ந்திருந்தார்
நினைத்தபடிமுடித்து நீடூழிவாழ்ந்தார்கள்
அமராவதியாட்கு ஆண்டுநிகைத்தருமவே
நோன்புகள்செய்தாட்கு நூறாண்டுசென்றவுடன்
சித்திரபுத்திரருஞ் சிந்தைதனிலேதெரிந்து
நோன்புமறவாமல் நூறாண்டுதானிருந்தாள்
அவளையுமிங்கே யழைக்கவேணுமென்று
கூட்டோடேசொர்க்கத்திற் கூட்டிவரவேணுமென்று
பூந்தேரனுப்பினர் புண்ணியனான்புட்டனே
அந்நேரந்தானும் அமராவதியாளும்
நூறுவயதளவு நோன்புவிடாதிருந்தாள்
சிவலோகம்போகிறேன் செகத்துள்ளபுண்ணியரே
நோன்புவிரதத்தை நுணுக்கமாய்த்தானறிந்து
ஆண்டாண்டுகள்தோறு மன்பாகத்தானிருந்து
கிருபைபெறவேயிருந்து கேளுங்களிக்கதையைப்
பயபக்தியாயிருந்து பலன்பெறுங்கள்புண்ணியரே
என்றுமிகச்சொல்லி யேற்றதொருவுத்தமியும்
அந்தியகாலம் அடுக்கவேவந்திடவே
தானதருமங்கள் தயவாகத்தான்கொடுத்தாள்
பிராம்மணபோஜனங்கள் பிரியமாய்நடத்திவைத்தாள்
சிவபூசைகுருபூசை செய்துமேதான்முடித்துக்
கூட்டோடேசொர்க்கத்திற் கூடுகிறேனெனவுரைத்தாள்
இந்தப்படிசொல்லி யிருக்குந்தறுவாயில்
அந்நேரம்வந்ததுகாண் அழகானபூந்தேரும்
அமராவதியும் அவள்தர்மராஜாவும்
இருபேருமொன்றாய் ஏறினாள்தேர்மீதில்
சிவகணங்கள்வந்து தேர்கொண்டுபோனார்கள்
பூமாரியாகப் பொழிந்தார்களந்நேரம்
பரமசிவனும் பார்வதியுமிதுகண்டு
சொர்க்கத்துவாசலையுந் திறக்கவேசொன்னார்காண்
சித்திரபுத்திரரைச் சென்றுமேதெண்டனிட்டு
சிவனுடுமையாளைச் சேரவேதெண்டனிட்டுச்
சிவனாரிடத்திற் செப்பினாளுத்தமியாள்
தருமங்கள்செய்யவின்னந் தரணிதனிற்பிறக்க
புத்திருமப்படியே பொருந்திப்பிறப்பதற்குப்
பிரமாவைப்பார்த்துப் பிறப்பிக்கச்சொல்லினர்காண்

அக்கோம்பிரமாவும் அகமகிழ்ந்துகொண்டாடி
தலைமகளாகப் பிறப்பித்தாரவனோம்
தருமராசாவையுந் தலைமகனுய்ப்பிறப்பித்தார்
ஒருவருக்கொருவர் ஒப்புறவாய்வாழ்ந்திருந்தார்
அந்தப்பிறவியிலும் அப்படியேதானதர்மம்
புண்ணியங்களுள்ளதெல்லாம் புகழ்ந்துநடத்தினர்காண்
அன்னக்கொடிகட்டி யடைவாகத்தான்வாழ்ந்து
தவறாமல்நோன்பு தானிருந்தாரதுபார்த்து
எல்லோருமந்நோன்பை யியல்பாயனுசரித்தார்
அனபடிவாழ்ந்தே யாண்டிறாறுனபின்பு
சித்திரபுத்திரருந் தேவரையனுப்பினர்காண்
கூட்டிவந்துவிட்டார்கள் குற்றமில்லா இருவரையும்
இன்னமுந்தானபிறக்க வேணுமோயேந்திழையே
என்றுசித்திரபுத்திரர் இதமாகத்தான்கேட்க
இறப்பதுவும்பிறப்பதுவும் இனியெனக்கு ஆகாது
கலியுகங்கள்வந்து கலந்துதேபுண்ணியரே
அதன்மங்கள்வந்து அழிந்துமேபுண்ணியரே
நட்சேத்திரபதவி நலமாகவருணுமெனச்
சிவனுரிடத்திலவர் செய்திகள்தானுரைத்து
அக்கிரம்பிர்மா அப்படியேசெய்துவைக்கி
நட்சேத்திரப்பதத்தில் நன்குடனேவாழ்ந்திருந்தார்
சிவனுரிடத்திலவர் செய்திகள்தானுரைக்க
அக்கிரமேபிர்மா அப்படியேசெய்துவைக்க
நட்சேத்திரப்பதத்தில் நன்குடனேவாழ்ந்திருந்தார்
இந்தக்கதையை யெடுத்துரைக்கக்கேட்டவர்கள்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரூன்றி
மூங்கில்போல்சுற்றம் மூசியாமல்வாழியவே
பூலோகமெல்லாம் பொருந்தவேவாழியவே
எல்லோருமநன்று மினிதாகவாழியவே
சித்திரபுத்திரனர் சீமானும்வாழியவே
பொன்னினெழுத்தாணியுடன் புத்தகமும்வாழியவே
செலவேலினாதர் நெடுங்காலம்வாழியவே
காந்திமதியம்மாளும் கணபதியும்வாழியவே
பத்மநாபவிலாசவச்சியந்திர சாலைவாழியவே

அமராவதிகதை முற்றிற்று.

——(✱)——